ஸ்ரீ:

சமண முனிவர்

இயற்றிய

# நாலடியார் மூலம்

மேற்கோள் விளக்கம்

அரும்பத அகராதி

முதலியவற்றுடன்

மயிலாப்பூர்

A. K. ஸ்வாமி அண்டு கம்பெனியாரால்



இராயபேட்டை

சாது அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது

 1924 [விலை அணா 8

# பொருளடக்கம்

## அச்சாகி வெளிவந்தனவாக இப்போழுது தெரிந்த நாலடியார்ப் பிரதிகளின் விவரம்.

| | மூலம் or மூலமும் உரையும் | பதிப்பித்தோர் பெயர் | உரையாசிரியர் பெயர் | பதிப்பித்த ஆண்டு | இயந்திரசாலை | விலை முதலியன |
|---|---|---|---|---|---|---|
| 1 | மூலமு முரையும் | முத்துசாமி முதலியார் | புதுவை நயனப்பமுதலியார் | சாலிவாகனசகம் 1767ருத்ரோத்காரி கார்த்திகைமீ | ரிகார்டு பிரஸ் | ரூ. 7-0-0 |
| 2 | மூலம் | ஞானப்பிரகாசர் | | 1812 | மாசத்தினசரிதை | |
| 3 | ,, | தாண்டவராயமுதலியார் | | 1831 | சர்ச்மிஷியோன் | |
| 4 | மூலமு முரையும் | மயிலை-திருவேங்கட முதலியார் | வேதகிரிமுதலியார் | 1908 | பண்டிதமித்திரன் | |
| 5 | ,, | குமாரசாமிபிள்ளை | கோமளபுரம் ராசகோபாலபிள்ளை | 1903 ஏப்ரல்மீ | ரிப்பன் பிரஸ் | ரூ. 1-0-0 |
| 6 | ,, | கே. பொ. சிங்காரவேலு முதலியார் | களத்தூர் வேதகிரிமுதலியார் | 1913 | பூமகள்விலாஸம் | ரூ. 1-4-0 |
| 7 | ,, | சே. கிருஷ்ணமாசாரியார் | வை. மு. சடகோபராமானுசாசார்ய | 1921 | ஸ்ரீ கணேச | ரூ. 2-0-0 |
| 8 | மூலம் | சீநிவாஸபிள்ளை | புதுவை அ. வேதகிரிமுதலியார் | 1837 | | ரூ. 1-0-0 |
| 9 | ,, | | | 1861 | பட்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் | ரூ. 1-0-0 |
| 10 | ,, | பு. க. ஸ்ரீனிவாசாசாரியார் | | 1915 | வித்யாரத்நாகரம் | ரூ. 0-10-0 |
| 11 | மூலமு முரையும் | பின்னத்தூர் A. நாராயணசாமி ஐயர் | | 1907, 1908 | Tamil Text for F. A. 1909 | |
| 12 | மூலம் | Rev. G. U. Pope. | | 1893 | at the Clarendan Press, Oxford 1893 | |

# முகவுரை

நாலடியார் என்பது கடைச்சங்கம் மருவிய பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று.

கீழ்க்கணக்குநூல்களாவன:—க - நாலடி, உ - நான்மணிக்கடிகை, ௩ - இனியதுநாற்பது, ௪ - இன்னாநாற்பது, ரு - களவழிநாற்பது, ௬ - கார்நாற்பது எ - ஐந்திணையைம்பது, அ - ஐந்திணையெழுபது, ௯ - திணைமொழியைம்பது, க0 - திணைமாலைநூற்றைம்பது, கக - திருவள்ளுவப்பயன், கஉ - திரிகடுகம், க௩ - ஆசாரக்கோவை, க௪ - பழமொழி, கரு - சிறுபஞ்சமூலம், க௬ - முதுமொழிக்காஞ்சி, கஎ - ஏலாதி, கஅ - கைந்நிலை என இவை; இதனை,

"நாலடி நான்மணி நானாற்ப * தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழிமாமூல
† மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
‡ கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"

என்னும் வெண்பாவாலறிந்து கொள்க.

கணக்கு - மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என இருவகைப்படும். ஐம்பது முதல் ஐந்நூறு இறுதியாக ஐவகைப்பாவானும் வருவது மேற்கணக்கெனப்படும். அவ்வகையெண்ணில் அறம் பொருள் இன்பங்களைப்பற்றி வெண்பா ஒன்றுமே வருவது கீழ்க்கணக்கெனப்படும். இவற்றிற்கு இலக்கணம்;—

"மேல்கீழ்க் கணக்கென விருவகைக் கணக்கே"

"மேற்கணக் கெனவுங் கீழ்க்கணக் கெனவும்
பாற்படும் வகையாற் பகர்ந்தனர் கொளலே"

"அகவலுங் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறா
மிகுத்துடன் றொகுப்பது மேற்கணக் கெனவும்
வெள்ளைத் தொகையு மவ்வகை யெண்பெறி
னெள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே"

---

(பி.- ம்) * 'ஐந்தொகை' † 'இன்னிலைசொல்' ‡ 'கைந்நிலையோடாம்' 'நன்னிலையவாங்'

"ஐம்பது முதலா வைந்நூ றீறு
வைவகைப் பாவும் பொருணெறி மரபிற்
றொகுக்கப் படுவது மேற்கணக் காகும்"

"அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
யறம்பொரு ளின்ப மடுக்கி யவ்வகைத்
திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்"

எனவரும் பன்னிருபாட்டியற்சூத்திரங்களாலுணர்க. கீழ்க்கணக்கிற்கு வெண்பாவேயன்றி அதனினமும் ஆம் என்பது முதுமொழிக்காஞ்சியில்

"ஆயுர்கலி யுலகத்து மக்கட் கெல்லா
மோதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை"

என வெண்செந்துறை வந்தவாற்றானறிக. மேற்கணக்கிற்கே "ஐம்பது முதலா வைந்நூ றீறு" எனவும் "பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறு" எனவும் சிறுமைக்கும் பெருமைக்கும் எண் வரையறை கூறி, "அவ்வகை யெண்பெறின்" எனவும் "அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி" எனவும் ஓதினமையாற் கீழ்க்கணக்குச் சிறுபான்மை ஐம்பதிற்குறைந்தும் ஐந்நூற்றின்மிக்கும் வருமெனக்கொள்க. இனியது, இன்னா, களவழி, கார் நான்கும் ஐம்பதிற்குறைந்துவந்தன. முப்பால் ஐந்நூற்றின் மிக்குவந்தது. இக் கீழ்க்கணக்கு நூல்களையே "தாயபனுவல்" என்னும் (தொல். செய். சூ. 236) பெயராற் கூறுவர் எனவும், இவை அறம் பொருளின்பமென்னு மூன்றற்குமிலக்கணஞ்சொல்லுவ எனவும், வேறிடையிடை அவையன்றியுந் தாஅய்ச்செல்வதுமுண்டெனவும், இச்செய்யுட்கள் அடிநிமிராது இரண்டடிமுதல் ஆறடியிறுதியாக வருவன எனவும், அவை எழுத்தினைகன்றுகாட்டாது சில எழுத்தினான் வருவன எனவும், அவையெண்ணுச்சுருங்கிச் சிலவாக வருவன எனவும், "வனப்பிய றானே" என்னும் செய்யுளியற்சூத்திரத்துப் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் உரைத்தவாற்றானுணர்ந்துகொள்க.

"சின்மென் மொழியாற் றாய பனுவலோ
டம்மை தானே யடிநிமிர் பின்றே"

என்ற தொல்காப்பியநெறியே போற்றி இப்பன்னிருபாட்டியற்கண்ணும் "அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி" எனக் கூறிய

னுங்காண்க. இந்நாலடியார் * அறம் † பொருள் ‡ இன்பமென மூன்றையும், சிலவாய மெல்லியசொற்களால் நான்கடியினேறுமல் நானூறு எண்ணுள்ள வெண்பாவான் வந்தமையாற் கீழ்க்கணக்காயவாறு கண்டு கொள்க.

"நானூறும் வேதமா நானூறு நன்னூலா
நானூறுங் கற்றற்கு நற்றுணையா - நானூறும்
பண்மொழியாள் பாகம் பகிர்ந்து சடைக்கரந்த
கண்ணுதலான் பெற்ற களிறு"

இது, நாலடிப்பாக்களிற் சிறப்புற்று நாலடியார் (பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரணப்பெயர்) என்ற தனிப் பெயர் பெற்று நூலுக்குக் கருவியாகுபெயராயிற்று. சைனரும் சைன நூல்களும் நாசமடைந்த பின்னும் காலகதியாய ஆற்றுப்பெருக்கால் அழியாமல் இந்நானூறுபாடல்கள் பிழைத்தன என்பது விளங்க,

"மன்னன் வழுதியர்கோன் வையைப்பே ராற்றி
னெண்ணி யிருநான்கோ டாயிரவ - ருன்னி
யெழுதியிடு மேட்டுக்கு ளேடெதிரே யேறும்
பழுதிலா நாலடியைப் பார்"

என்று ஒரு பழைய வெண்பா உள்ளது.

'வேறுசில ஏடுகளும் நீந்தின; அவைதாம் பழமொழி முதலியன' என்பாரும், 'நீர்நிலைக்குமேல் இவை நாலடி நின்றனவாதலால் 'நாலடியார்' என்று வழங்கலாயிற்று' என்பாரும் எனக் கொள்கை

---

* "அறவிய லிருவகைத்தா மவை தம்முட்
டுறவே றில்லற மிருமூன் றென்ப"

† "பொருளியல் வகையே புலப்படக் கிளப்பி
னரசிய லேழதி கார மாகு
நட்பிய ஹன்கே நண்ணுதலை யின்ப
மூன்றே துன்ப வியலதி கார
நான்கே யொன்றே பொதுவியல் பகையியல்
கூறதி கார நான்கே பன்னெறி
கூறதி கார மொன்றெனக் கிளப்பர்"

‡ "கடையின்ப வகைதான் கருதி னிருவகை
யின்பதுன்ப வதிகார மொன்றே யேனை
யின்பங் கூறதிகா ரமிரண்டே"

வேறுபட்டோர் பலருளர். இந்நூலைப்பற்றிய வேறு பல மாறுபாடுற்ற கன்னபரம்பரைச் செய்திகளும் கேட்கப்படுகின்றன.

படினும், "இந்நூல், பதுமனுர் என்பவர் தொகுத்த தனிப்பாடற்றிரட்டு; அவர் பழைய சைனநூல்களினின்று அம்மதக்கொள்கைகள் நீங்கிய நீதிமொழிகளை, இளம்பூரணர், பேராசிரியர், பரிமேலழகர், * அடியார்க்குநல்லார், கல்லாடர், சேனவரையர் முதலானவரும், † வீரசோழிய உரையாசிரியரும் பிறநூலாசிரியரும் கையாண்டவாறு, சேரத்திரட்டிப் பொருள் வழியே பாகுபாடுசெய்து இவ்வாறு அமைத்தனர்" என்பது வெளியாகின்றது. ஆயினும், பதுமனுரைப்பற்றி யாதும் விளங்கவில்லை. கடவுள்வாழ்த்துப்பாடியவர் அவராயின் அவரும் சைனராதல் வேண்டும்; நூலை வகுத்த வகையினின்றும் துறவறத்தை முன் வைத்துக் காமத்துப் பாலுக்கு ஒருபது பாடலையே அமைத்துக் கொண்டதினின்றும், இவரைச்சைனராகக்கொள்ளுதல் தக்கதெனத்தோற்றுகின்றது.

இவ்வாறு தொகுக்கப்பட்ட நூல், ஒரு காலத்துக் கவிஞர் செய்த தன்று என்பதற்குத் தக்க காரணம் வேண்டும். பதுமனுர் சங்ககாலத்துக்கு மிகப்பிந்தியவராக ‡ இருப்பின், அவர் தமது காலத்திற் சங்க நூல்களென்று கொள்ளப்பட்டவற்றினின்றும் இந்நூலைத் தொகுத்திருப்பாராயினும் சிற்சில பிழைகள் நேர்ந்திருக்கக் கூடும்; கடைச்சங்கத்தினின்று நூல் பல பெருகிச் செழித்த நாட்கள் சென்றபின் வந்த பெரியார் அந்நூல்களிற் சிறப்புற்றனவற்றைத் தொகுத்துக் கணக்கிடுவது பொருத்தமேயாம். அவ்வாறுன மூலநூல்களுக்குச் சில நூற்ருண்டுகளுக்குப் பின்னரே தொகைநூல்கள் தொகுக்கப்படுவன. தொகுத்தவர் காலத்தைக்கொண்டு மூலநூல்களின் காலத்தை அறிவது சிரம சாத்தியமாகும்.

நாலடி 200, 296 ஆம் § பாடல்களிற், 'பெருமுத்தரையர்' என்பவர் பாராட்டப்படுகின்றனர். அவர் ஒருவரோ பலரோ என்பதிற்

---

* இவரைப் பன்னிரண்டாம்நூற்ருண்டிலிருந்தவர் என்ப; செந்தமிழ். Vol. IV : pp. 401—403.

† கி - பி 1064 - 1070 ல் வீரசோழன் பெயரால் இயற்றப்பட்டது வீரசோழியம்; செந்தமிழ். Vol. X : p. 287.

‡ கி - பி. 14 ஆம் நூற்ருண்டில் இருந்தவாகக் கருதப்படும் நச்சினார்க்கினியருக்கு இவர் முற்பட்டவர்.

§ "பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங் கருனைச்சோ றார்குவர் கயவர்", "நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே, செல்வரைச்சென் றிரவா தார்".

கருத்து வேறுபாடுகள் உள்ளன. சிலபாண்டியஅரசர்க்கும், சில பல்லவ அரசர்க்கும், வேறு சிற்றரசர்க்கும் 'முத்தரையர்' என்ற பட்டப்பெயர் இருந்ததென்றுதெரியவருகின்றது. இம்மூவகையினரில் எவரைக்குறிப்பன இப்பாடல்கள் என்று அறியவழியில்லை. முடியுடைமன்னர் மூவரையுமே பொதுப்படக் குறிக்குமோ என்ற ஐயமும் நிகழ்கின்றது. பெருமுத்தரையர் காலம் விளங்கினும், 200, 296 ஆம் பாக்களின் காலம் விளங்குமேயன்றி, 'மற்றைய பாக்கள் சங்ககாலத்தன அல்ல' என மறுத்தற்கு இயலாது. பெருமுத்தரையர், பதுமனார் காலத்து மன்னராயின் அவர்களது வம்சத்தைச் சிறப்பித்துக் கூறும் பாக்களைச் சரிவர ஆராயாமல், 'சங்ககாலத்தன' என்று கொண்டு சேர்த்திருக்கலாம். சங்ககாலத்திற் * பெருமுத்தரையர் என்ற பெயர்கொண்டவரே இல்லை என்று உறுதி கூறுவதற்குச் சங்ககாலமுழுமையும் நமக்கு இப்பொழுதினும் தெளிவாக விளங்கவேண்டுமன்றோ? புகழ்படைத்த ஏனைய நூலாசிரியரும் உரையாசிரியரும் கையாண்ட பாக்களையேனும் சங்க காலத்தன என்று கொள்ளுதல் அவசியமாகும்; ஏனெனில், அவர்கள் சங்கநூல்களை யன்றிப் பிற்காலத்து நூல்களினின்றும் மேற்கோள் காட்டுவது வழக்கமில்லையாதலின்

வடமொழிச் சுலோகங்களின் கருத்தை ஒட்டினவாகச் சிற்சில பாடல்கள் நாலடியாரிற் காணப்படுகின்றன; † ஆயினும், அவை மொழிபெயர்க்கப்பட்டவை என்று சொல்லமுடியா. தமிழ்நாட்டுச் சைன முனிவரிற்பெரும்பாலாரும் இருமொழியிலும தேர்ந்தவர். அவரே இருமொழிலும் (வடமொழி, தென்மொழி) ஆக்கியிருக்கலாம். ஒன்றினின்றொன்று மொழிபெயர்க்கப்பட்டுமிருக்கலாம். வடமொழிச் சுலோகங்களைச் செய்த புலவரின் காலதேசவர்த்தமானங்கள் விளங்காதிருக்கையில் எவ்வித முடிவுக்கும் வரக்கூடாது என்பது ஒருதலை. "பர்த்ருஹரி" என்பவர் காலம் தெரிந்ததே (கி - பி. 651); அவரது 'முந்நூறு' சுலோகங்களிற் சிலவற்றைத் தழுவிய பாடல்கள் நாலடியாரிற்காணப்படுகின்றனவே; ஆகையால் நாலடியார், பர்த்ருஹரிக்குப் பிற்பட்ட நூலன்றோ? என்பர் ‡ சிலர்; வேறு சிலர் "பர்த்ருஹரியும் தொகை

---

* Vide Reports On Epigraphy, Para 9 of 1896—97: Paras 19—22 of 1898—9; Para 22 of 1906—7 and South Indian Reports by Dr. E Hultzsch. Vol. 1. Page, 11

† பஞ்சதந்திரம் (கி பி. 531-72), சார்ங்கதரபத்ததி, கி-பி 1063. (செந்தமிழ், தொகுதி, 10; பக்கம், 285)

‡ செந்தமிழ், தொகுதி, 10; பக்கம், 230-36,281-85.

நூல் தொகுத்தவரே; அவரது 'மூந்நூறு' சுலோகங்களிற் பல தொன்று தொட்டு வழங்கி வந்தனவே * நீதிநூல் தொகுத்த அவர் சைனரின் தென்மொழி நூல்களைக் கற்றுணர்தல் இயலாதோ? அன்றி, பேரறிவும் சொன்னயமும் ஒருவர் பக்கல் இருப்பனவோ? பலமொழி களுக்கும் பொதுவல்லவோ? தனித்தனி ஒருபொருள்பட இருவர் எழுதுவதும் அசாத்தியமோ? என்று சமாதானங்கூறுவர். மற்றொருவர் † ஐந்தாம் நூற்றாண்டில் அரசுபுரிந்த வச்சிரநந்தி என்னும் சைனனது சங்கத்து நூலாக இருக்கலாமோ இந்நாலடியார் என்ற ஐயத்தையும் மேற்கொள்கின்றனர்.

இந்நாலடியார் முற்றும் பிற்காலத்து வாக்கன்று; சிற்சில இடங் களிற் பதுமனார் சோர்வுற்றிருப்பினும் அவர் சங்ககாலநூல்களி னின்றுமே அநேகமாய்த் தொகுத்திருக்க வேண்டும். 'உண்மை யாதேனுமாகுக' என்றுகொண்டு "நாலு மிரண்டுஞ் சொல்லுக் குறுதி" என்றும், "பழகுதமிழ்ச், சொல்லருமை நாலிரண்டில்" என்றும்,

"நாலடி வள்ளுவ ராமேயிப் பாலை நடந்தபெருங்
காலடி மேலடி மானடி யேகட் டிரலிற் பட்ட
பாலடிசில் வெண்ணை யுண்டோ னரங்கன் பனிவரையில்
வேலடி முள்ளுக்குப் பாயமிட் டேகும் விரகு நன்றே" என்றும்

குறளோடு ஒப்பவைக்கப்பட்ட இப்பாடல்கள் மிகச் சிறந்த நூலா சிரியராலும் உரையாசிரியராலும் எவ்வாறு பாராட்டப்பட்டன என்ப தை ஈங்கு எடுத்துக் காட்டிய குறிப்புகளினின்றுவது உணர்ந்து இச்சிறப்புற்ற நூலைக்கற்பது அவசியமென நாம்தெளிவுறல் வேண்டும்.

வெள்ளான் மரபுக்கு வேதமெனச் சான்றோர்கள்
எல்லாருங் கூடி யெடுத்துரைத்த—சொல்லார்ந்த
நாலடிநா னூறு நன்கினிதா வென்மனத்தே
சீலமுட னிற்க தெளிந்து.

என்று வழுத்தித் தமிழ்மக்கள் முன்னாளில் இந்நூலையே முதற் பாடமாக இளமையிற் கற்று வந்தனராம்; அவ்வாறே தற்கால மாண வரும் இனிது கற்றுணருமாறு பல பிரதிகளுடன் ஆராய்ந்து மேற் கோள்விளக்கம் அரும்பதஅகராதி முதலியன அமைத்து எனது நண்

---

* தமிழ்வரலாறு, பக்கம், 33.

† தமிழ்வரலாறு, பக்கம், 35.

பர் பதிப்பித்திருக்கின்றனர். இவர் முயற்சியீடேறும் வண்ணம், தமிழுலகத்தார் ஒவ்வொருவரும் தத்தமக்கு இயன்ற அளவு மன மொழி மெய்களால் உதவி புரியுமாறு வேண்டுகின்றேன். இதைப் போலவே பழைய தமிழ்நூல்கள் பலவற்றை ஆராய்ந்து உரைகண்டும், புதுநூல்கள் இயற்றியும் தமிழ்மக்களுக்கு உதவும்படி என் நண்பருக்கு வேண்டிய ஊக்கமும் ஆயுளும் செழுமையும் மன முவப்ப அருளுமாறு கடவுளைப்பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம் :

"சுந்தரவிலாசம்"
மயிலாப்பூர்
25—5—24.

வே. நாராயணையர், M.A., M.L.,
*Advocate.*



# இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

---

அகநா, அகம் - அகநானூறு.
அசை - அசையோத்து.
அடியார் - அடியார்க்குநல்லாருரை.
அதி - அதிகரணம், அதிகாரம்.
அம்பிகாபதி - அம்பிகாபதிக்கோவை.
அயோத்தி - அயோத்தியாகாண்டம்.
அரசாட்சி - அரசாட்சிப்படலம்.
அரசு - அரசாட்சிச்சருக்கம்.
அலங்கார - அலங்காரப்படலம்.
அவிரோதவுந்தியார்.
அறநெறி - அறநெறிச்சாரம்.
ஆசீவக - ஆசீவகவாதச்சருக்கம்.
ஆத்திசூடி
இடை - இடைச்சொல்லியல்.
இரத - இரதநூபுரசக்கரவாளச்சருக்கம்.
இராமாவதாரம்.
இ. கொ - இலக்கணக்கொத்து.
இ. வி - இலக்கணவிளக்கம்.
இளம் - இளம்பூரணம்.
இறை - இறையனாரகப்பொருள்.
இனியது - இனியதுநாற்பது.
இனியவை - இனியவைநாற்பது.
உபகாரப் - உபகாரப்படலம்.
உவம - உரிமவியல்
உரி - உரிச்சொல்லியல்.
எச்ச - எச்சவியல்.
ஏலாதி
ஒழிபு - ஒழிபியல்.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கல் - கல்லாடருரை.
கலி - கலித்தொகை
கலிங்க கலிங்கத்துப்பரணி.
காசிகண்டம்
களவு - களவியல்
காஞ்சி - காஞ்சிப்புராணம்.
கிளவி - கிளவியாக்கம்.
கிளைகண்டு - கிளைகண்டுநீங்குபடலம்.
குசேலோபாக்கியானம்.
குண்டலகேசி.
குற்றியலுகரம் - குற்றியலுகரப் [புணரியல்.
குறள் - திருக்குறள்.
குறுந்திரட்டு.
கொலைமறுத்தல்.
கொன்றைவேந்தன்.
சந்தவிருத்தம் - திருச்சந்தவிருத்தம்.
சிதம்பரப்பாட்டியல்.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிவஞானசரிதை.
சிவஞானநிலயம.
சிவஞான போதமாபாடியம்.
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சூ - சூத்திரம்.
சூளா - சூளாமணி.
செய் - செய்யுளியல், செய்யுளோத்து.
சே - சேனாவரையம்.
சோணசைல - சோணசைலமாலை.
தக்கயாகப்பரணி.
ஞானவாசிட்டம்.
ஞானாமிர்தம்.
தண்டலை - தண்டலையார்சதகம்.
தண்டி - தண்டியலங்காரம்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக்
கோவையார்.
திருநூற்று - திருநூற்றந்தாதி.
திருவாய்மொழி.
திருவிளை - திருவிளையாடற்புராணம்.
துறவு - துறவுச்சருக்கம்.
தொடை - தொடையோத்து.
தொல் - தொல்காப்பியம்.
தோன்றி.
ந - நச்சினார்க்கினியம்.
நல்வழி.
நறுந்தொகை.
நன். மயிலை - நன்னூல் மயிலைநாதருரை.
நன். வி - நன்னூல்விருத்தியுரை.
நன்னெறி.

நாடு - நாட்டுப்படலம்.
நாலடி - நாலடியார்.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நீதிநெறி - நீதிநெறிவிளக்கம்.
நீதிவெண்பா.
நீலகேசி - நீலகேசித்தெருட்டு.
நேமி - நேமிநாதம்.
நைடதம்.
பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்.
பதி - பதிகம்.
பரிமேல் - பரிமேலழகருரை.
பழ - பழமொழி.
பழியஞ்சின - பழியஞ்சின திருவிளையாடல்.
பன்னூற்றிரட்டு.
பாரதவெண்பா.
பி. ம் - பிரதிபேதம்
பிரயோக - பிரயோகவிவேகம்.
புணரியல்.
புறத்திணை - புறத்திணையியல்.
புறநா, புறம் - புறநானூறு.
பெருங் - பெருங்கதை.
பெரியதிருமொழி.
பெருந்தேவனார்
பெரும்பாண்- பெரும்பாணாற்றுப்படை.
போர் - போராசிரியம்.
பொருந - பொருநராற்றுப்படை.
பொருளியல்
மணி - மணிமேகலை.
மதுரை - மதுரைக்காஞ்சி.
மந்திரமாலை - திருமந்திரமாலை.
மரபு - மரபியல்.
முதுமொழிக்காஞ்சி.
முருகு - திருமுருகாற்றுப்படை.
மூதுரை.
மெய்ப்பாடு - மெய்ப்பாட்டியல்.
மேருமந்தரம் - மேருமந்தரபுராணம்.
மேற் - மேற்கோள்.
மோகவதைப்பரணி.
யா. கா - யாப்பருங்கலக்காரிகை
யாப்பு - யாப்பதிகாரம்.
யா. வி - யாப்பருங்கலவிருத்தி
வளையாபதி.
விநாயக - விநாயகபுராணம்.
வி. பா - வில்லிபுத்தூராழ்வார் பாரதம்.
வினை - வினைச்சொல்லியல்.
வீர - . வீரசோழியம்.
வெங்கைக்கோவை.
வெற்றிவேற்கை.
வேள்வி - வேள்விப்படலம்.
வைராக்கியசதகம்.

உ

ஸ்ரீ:

# நாலடியார்

## கடவுள்வாழ்த்து.

வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
காணிலந் தோயாக் கடவுளை—யாநிலஞ்
சென்னி யுறவணங்கிச் சேர்துமெம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று.

1. "வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்: இது செய்யாவென்னும் வினையெச்சம்" (தோல். வினை. சூ. 33 - பேர்); கட்டளையொரூஉமோனைத் தொடைக்கு (தோல். செய். சூ. 92 - ந) மேற் கோள்.

2. காணிலந் தோயாக் கடவுள்: "பாரணையாவடி" (திருநூற்று. 91) எனப் பிறர் கூறுதலும் காண்க.

1-2. தம்மொடு தாம் வந்த கட்டளையடியெதுகைக்கு (தோல் செய். சூ, 93 - ந) மேற்கோள்.

3. சேர்தல் - இடைவிடாது நினைத்தல்; "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்" (குறள். 3) என்பதற்குப் பரிமேலழகர் எழுதிய விசேட வுரையைப் பார்க்க.

பு. தேவர்களின் தோற்றத்திற்கு இந்திரவில்லை உவமைகூறுதல்மரபு; இதனை, "திருவி விட்டுத் திகழ்தரு மேனியன்............பெருவிறல் வானவன்" (சிலப். 15 : 156 - 160); "திருவி விட்டுத் திகழ்தரு மேனியள்" (மணி. 6 : 10) "அந்தரப்பே ருலகத்து ளமரரைமற் றறையுங்கா, லிந்திரவில் லெனவெளிப் பட் டிமையவர்க டொழுதேத்தச், சுந்தரநன் மணிப்படிவ மெனச்சுடர்ந்து தோன்றுவரே" (சூளா. துறவு. 209); "மற்றவன் றேவனாகி வானிடு சிலையிற் றோன்றி" (சீவக. 951) "நூல்கள், இந்திரவில் இன்னவாறு தோன்றுமென்ற அது தோன்று முறைமை கூறாவாகலின், அங்ஙனந் தோன்றுகின்ற தேவர்க்கு அஃது உவமையாயிற்று; இக்கருத்தானன்றே 'வானிடு வில்லின் வரவறியா' என்றார் பிறரும்" (ஷை. ஷை உரை); "வானிடு வில்லின் வரவறியாத வகையன்" (நீலகேசி. ஆசீவக. 26), "வானத்து [illegible] போல இன்னவாறு வந்ததென்றறியாமற்றோன்றுவனெம்முடைய ஆப்தன்" (ஷை. ஷை. உரை) என்பனவற்றாலறிக. இவ்வுவமைக்குக் கூறப்பட்டுள்ள காரணம் ஈண்டறிந்து இன்புறற்பாலது. கடவுள்வாழ்த்தின் வேறுபாடுகளுள் ஒன்றற்கு (தோல். செய். சூ. 109 - ந) மேற்கோள்.

# நூல்

## முதலாவது, அறத்துப்பால்

### துறவறவியல்

## முதலாம் அதிகாரம், செல்வநிலையாமை.

1. *அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட*
*மறுசிகை நீக்கி யுண்டாரும்—வறிஞராய்ச்*
*சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்*
*றுண்டாக வைக்கற்பாற் றன்று.*

1\. அளவடிக்கு (தொல். செய். சூ. 32 - பேர்) மேற்கோள்; அறுசுவை யுண்டி : (நன் - மயிலை. சூ. 453) மேற்கோள்.

2\. சிகை - பிடிஅளவுகொண்ட உணவு; "இருசிகையு முண்டீரோ" (நாலடி. 18 : 2). மறுசிகை நீக்கியுண்டல் - முதற்சிகையைமாத்திரம்புசித்தல்; செல்வர் தமக்குப் படைத்த உணவுப்பொருள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பிடி யெடுத்துண்டு மிச்சத்தை எச்சிலென நீக்குதல் மரபு; "தன்னெச்சி லுண்ணுத் தகைமையான்" (பாரதவெண்பா, 311) என்பதும் இதனை வலியுறுத்தும்.

ழ. இச்செய்யுளுடன், நாலடி. 289 - ஆம் செய்யுளும், "முல்லைமுகை சொரிந்தாற்போன் றினியபாலடிசின் மகளிரேந்த, நல்லகருனையா ளுள்வாயும் பொற்கலத்து நயந்துண்டார்க, ளல்லலடைய வடகிடுமி னேட்டகத்தென் றயில்வார்க் கண்டுஞ், செல்வநமரங்கா ணினையன்மின் செய்தவமே நினைமின்கண்டீர்" (சீவக 2623); "ஆமின் சுவையவை யாறொ டடிசிலுண் டார்ந்தபின், றூமென் மொழிமடவா ரிரக்கப் பின்னுந் துற்றுவா, ரீமி னெமக்கொரு துற்றென் றிடறுவ ராதலிற், கோமின் துழாய்முடி யாதியஞ் சோதி குணங்களே" (திருவாய்மொழி 4. 1 : 7), "சிறப்புஞ் செல்வமும் பெருமையு முடையோ, ரறக்கூழ்ச் சாலை யடையினு மடைவர்" (வெற்றிவேற்கை) என்பனவும் ஒப்பிடற்பாலன.

இச்செய்யுளை, ஒருநோக்காக ஓடிய நோக்கிற்கும் (தொல். செய். சூ. 104), நேரிசைவெண்பாவிற்கும் (ஷை. ஷை. சூ. 118) மேற்கோள் காட்டுவர் இளம்பூரணர்.

2. *துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்*
*பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க*
*வகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்*
*சகடக்கால் போல வரும்.*

1\. துகடீர் பெருஞ் செல்வம் - குற்றம் நீங்கிய மிக்க பொருள் = தருமவழியில் தேடிய பொருள்.

2\. பகடு நடந்த கூழ் - ஏருழுதலினாலுண்டாகிய உணவுப்பொருளை; இரண்டாம்வேற்றுமைத்தொகைக்கு (தொல். எச்ச. சூ. 17 - ந) மேற்கோள்.

1 - 2. "படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு, முடைப்பெருஞ் செல்வர்" (புறநா. 188); "அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா, லற்குப வாங்கே செயல்" குறள், 333.

மு. "துகடீர் பெருஞ் செல்வந் தோன்றியக்காற் றொட்டு' எனவும்......... எனவும், இந்நால்வகைச் செய்யுட்கண், முடியுந் துணையும் அடிதோறுங் குறித்த பொருளை முடிய நாட்டியவாறு காண்க" (தொல். செய். சூ. 78 - ந); தனிச் சொலின்றி ஒருவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பாவிற்கு மேற்கோள் காட்டுவர் யாப்பருங்கலவிருத்தியுரையாசிரியரும் காரிகையுரையாசிரியரும் (யா - வி. செய். சூ. 7; யா - கா. செய். 4); "சென்றோர் முகப்பப் பொரு ளுங் கிடவா, தொழிந்தவ ரெல்லா முண்ணாதுஞ் செல்லார்" கலி. 18.

3\. யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரு—மேனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள.

2\. "'சேனைத்தலைவராய்' என்னும் பாட்டுப்போல ஆயென்னுஞ் 'சன்' கொடுத்து விரவாவினையெச்சமாக்குவர்" (பிரயோக. சூ. 39), "'சேனைத் தலை வராய்' என்பனபோலநின்றன கெடுதல்விகாரப்பட்டுநின்றனவென்பாரும், ஆயென்னுமொழி வருவிக்க வேண்டுமென்பாருமுளர்" இ - கொ. சூ. 89 - உரை.

1 - 2. நாலடி. 21 : 1 - 2; "அலகுடன் விளங்கு மம்பொற் குடைநிழ லரசர்சூழ, வுலகுடன் வணங்க வோடை யுயர்களிற் றெருத்த மேலாற், பலகுடை பணியச் செல்லும் பண்பிது" சூளா. துறவு. 4.

2-3. மேனைவினையுலத்தல் - நல்வினை உதவுதலால்; மேனை......வீழ்வர்: "நல்வினை, தீர்விடத்து நிற்குமாங் தீது" (நாலடி. 51); "முதிர்வினை நுங்கட்கு முடிந்த தாகலின்" (சிலப். பதி. 45) என்பதனுரையில் "மேனை, வினையுலப்ப" என்னும் இப்பகுதியை மேற்கோள் காட்டுவர் அடியார்க்குநல்லார். [மேனை வினை - பழவினை; 'மேல' என்பது 'மேன' (இறை. சூ. 60) எனவருதல் போல்வந்தது.

மு. "உய்ம்மின் றிரைகொணர்ந்தென் றுலகாண்டவ ரிம்மையே, தம்மின் சுவை மடவாரைப் பிறர்கொள்ளத் தலம்விட்டு, வெம்மி னொளிவெயிற் கானகம் போய்க் குமை தின்பர்கள்," (திருவாய்மொழி, 4:1:2), "குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர், நடைமெலிந்தோரூர் நண்ணினு நண்ணுவர்", "குன்றத்தனை யிருநிதியைப் படைத்தோ, ரன்றைப் பகலே யழியினு மழிவர்" (வெற்றிவேற் கை). திருநூற்றந்தாதி, 44 ஆம்பாட்டு உரையில் இச்செய்யுள் முற்றும் மேற் கோளாகக் காட்டப்பெற்றிருக்கிறது. "தானைசூழ மண்ணுலகை யாண்டழிபவ

ரென்பதற்கு உதாரணமாகக் கூறுவர் (வைராக்கிய சதகம், 6 - உரை) இச் செய்யுளுக்கு அரிச்சந்திரசரிதையும் மன்மதன்மனைவியாகிய இரதியைச் சம்பரா சுரன் கைக்கொண்டகன்றதும் உவமைகளாம்.

4. நின்றன நின்றன நில்லா வெனவுணர்ந்
தொன்றின வொன்றின வல்லே செயிற்செய்க
சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று.

1 - 2. "நின்றன நின்றன......... செயிற்செய்க' என்றவழி நின்றன பலவாதலின் அடுக்கிவந்தசொல்லும் பொருள்குறித்துநின்றது" தொல். எச்ச. சூ. 26-பேர்.

4. இவ்வடி, விரைவின்கண் ஒருசொல்லடுக்கி வந்ததற்கும் (தொல். எச்ச. சூ. 15 - ந; இ-வி. சூ. 346), அல்வழிச்சந்தியுள், அடுக்குத்தொடருக் கும் (ஷை. சூ. 54) மேற்கோள்; "கூற்று - வாழ்நாள் இடையறுது செல்லும் காலத்தினைப் பொருள் வகையாற் கூறுபடுத்தும் கடவுள்" (தொல். புறத்திணை. சூ. 24) என்பர் நச்சினார்க்கினியர்.

3 - 4. தெளிவுபற்றி, நிகழ்காலமும் எதிர்காலமும் இறந்தகாலத்தால் வந்த மைக்கும் (தொல். வினை. சூ. 48 - பேர்), சதிர்ப்பிரத்தியயத்தில் முற்றுச் சொல் அடுக்கி வந்ததற்கும் (பிரயோக. சூ. 39 - உரை) உவப்புக்கும் (நேமி. சொல். 10) மேற்கோள்.

மு. "காலைச் செய்வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச் சாலச் செய் வாரே தலைப்படுவார் - மாலை, கிடந்தா னெழுத லரிதான் மற்றென்கொ, லறங் காலை செய்யாத வாறு" (அறநெறி. 67) என்பதை ஒப்பிடுக.

5. என்னுனு மொன்றுதங் கையுறப் பெற்றக்காற்
பின்னுவ தென்று § பிடித்திரா—முன்னே
கொடுத்தா ருயப்போவர் கோடிமீக் கூற்றந்
தொடுத்தாறு செல்லுஞ் சுரம்.

2. இரா - இராமல்; "பின்னுவ.........முன்னே : இது கட்டளை ஒரூஉ முரண்" தொல். செய். சூ. 95 - ந.

3. கோடு இல் தீக்கூற்றம் எனப் பிரிக்க.

4. தொடுத்து - கட்டி; "நார்த்தொடுத் தீர்க்கிலென்" (நாலடி. 26) என் புழியும் காண்க.

மு. குறள், 36.

(பி - ம்) § 'பிடித்திரார்'

6. இழைத்தநா ளெல்லை யிகவா பிழைத்தொரீஇக்
கூற்றங் ‡ குதித்துய்ந்தா ரீங்கில்லை—யாற்றப்

பெரும்பொருள் வைத்தீர் வழங்குமி னாளைத்
தழீஇந்தழீஇந் தண்ணம் படும்.

2. குதித்தல் - தப்புதல்; "கூற்றங் குதித்துய்ந்த நாவாரோ வில்" (பழமொழி, 183); "கூற்றங் குதித்தலுங் கைகூடும்" (குறள். 269); "கூழைமை பயின்ற கூற்ற வாசனைக் குதிக்குஞ் சூழ்ச்சி, பாழியந் தடக்கை வேந்தே பயின்றிலம் யாங்க ளென்றார்" (சூளா. துறவு. 18) என்னுமிடங்களிலும் காண்க.

3 - 4. நாளை......படும்: "சென்றநா ளெல்லாஞ் சிறுவிரல்வைத் தெண்ணலா, நின்றநாள் யார்க்கு முணர்வரிது" (அறநெறி, 69) தண்ணம் - பிணப்பறை; தண்ணுமை விகாரப்பட்டது.

மு. இச்செய்யுளுடன், "கோட்டு நாளிட்டுக் குறையுணர வாராதால், மீட்டொருநா ளிடையுந் தாராதால் - வீட்டுதற்கே, வஞ்சஞ்செய் கூற்றம் வருதலா னன்றாற்றி, யஞ்சா தமைந்திருக்கற் பாற்று" (அறநெறி. 109) என்பது ஒப்பிடற்பாலது.

(பி - ம்) ‡ 'குதித்துய்ந்தீ ரீங்கு'

7. தோற்றஞ்சான் ஞாயிறு நாழியா வைகலுங்
கூற்ற மளந்துநுந் நாளுண்ணு—மாற்ற
வறஞ்செய் தருளுடையீ ராகுமின் யாரும்
பிறந்தும் * பிறவாதா ரில்.

1. தோற்றஞ்சால் - விளக்கமமைந்த; "தோற்றஞ்சால் தொகு பொருள்" (கலி. 17) என்புழியுங் காண்க.

1 - 2. தோற்றஞ்சால்......அளந்து: "வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம்" (நாலடி. 22).; "நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும், வாளதுணர் வார்ப்பெறின்" (குறள், 334), "வாள்களாகி நாள்கள் செல்ல" (சந்தவிருத்தம், 112) எனப்பிறர் கூறியிருத்தலும் காண்க.

3. அறமாவது, மனுமுதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம்; அருளாவது, தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்களிடத்துஞ் செல்வதாய கருணை; "அறஞ்செய் தருளுடையராதல்" (பழ. 215), "அறனு மருளுடையான் கண்ணதேயாகும்" (சிறுபஞ்ச), "அருளிலார்க் கவ்வுலகமில்லை" குறள், 247.

(பி - ம்) * 'இறவாதாரில்'

8. செல்வர்யா மென்றுதாஞ் செல்வுழி யெண்ணாத
புல்லறி வாளர் பெருஞ்செல்வ—† மெல்லிற்
கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போற் றோன்றி
மருங்கறக் கெட்டு விடும்.

1. செல்வுழி : நாலடி. 154 : 1 ; 230 : 3 ; 238 : 3 ; "செல்வுழி, உண்புழி' என்பன வினைத்தொகையென மறுக்க" (தொல். புணரியல், சூ. 38 - ந), 'தேய்விடத்து' (நாலடி. 51) என்பதிலும் காண்க.

(பி - ம்) † 'எல்லக்'

9. உண்ணா னொளிநிறா னோங்கு புகழ்செய்யான்
றுன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
விழந்தானென் றெண்ணப் படும்.

1. 'ஒளி' என்பதற்கு, 'தானுள்ளுய காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை' எனப்பொருள் கூறி, 'ஒளிநிறா னோங்குபுகழ் செய்யான்' என்னுமிப்பகுதியை மேற்கோள் காட்டுவர் பரிமேலழகர் (குறள். 971), "ஒளி - தாம் உளராய காலத்து எல்லாரானும் நன்கு மதிக்கப்படுதல்", "ஒளி - உறங்கா நிற்கவும் தாம் உலகங் காக்கின்ற அவர் கடவுட்டன்மை" ஷை 659, 698 - பரிமேல்), 'வெள்ளைமையின்மை' என்பர் (தொல். பொருளியல், சூ. 53) நச்சினார்க்கினியர். புகழ்-இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகின் நிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி ; குறள், 24 - அதி. பரிமேல்.

2 - 3. கொன்னென்னுமிடைச்சொல் பயனின்மையாகிய பொருட்கண் வந்ததற்கு மேற்கோள் ; நேமி. 53 - உரை.

3 - 4. அஆ........எண்ணப்படும் : ஆகாரவிடைச்சொல் இரக்கக் குறிப்பு உணர்த்தியதற்கும் (தொல். இடை. சூ. 34 - ந) அஆ என்பது அருளின்கட்குறிப்பு உணர்த்தியதற்கும் (நன் - மயிலை. சூ. 420 ; நன் - வி. சூ. 421 ; இ - வி. சூ. 279) குறிப்பின்கண், தனிக்குறில் விட்டிசைத்து மொழிமுதலில் நேரசையாய் வந்ததற்கும் (தொல். செய். சூ. 10 - பேர்; ந; யா - வி. அசை. சூ. 7 ; யா - கா. ஒழிபு. 2 ; இ - வி. சூ. 743) மேற்கோள்.

10. உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட
வுய்த்தீட்டுந் தேனீக் கரி.

1. செற்றும் - செறுத்தும்.

பூ. "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்" என்ற முதுமொழியை ஒப்பிடுக.

## இரண்டாம் அதிகாரம், இளமைநிலையாமை.

11\. நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்—புரைதீரா
மன்னா விளமை மகிழ்ந்தாரே கோலூன்றி
யின்னாங் கெழுந்திருப் பார்.

1\. என்றென்னுமிடைச்சொல், வினைப்பொருண்மைகுறித்து வருவதற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 11 - சே; ந; இ - வி.சூ. 255..

1-2. "திறைமன்ன ருய்ப்பத் திருநிற்பச் செங்கோ னடப்பக், குறை வின்றிக் கொற்ற முயரத் தெவ்வர்தேர் பணிய, வுறைகின்ற காலத் தறங்கேட் டுருமுற்ற பாம்பி, னறிவன் னடிக்கீ ழரசஞ்சித் துறந்த வாறும்" (சீவக. 27) என்பதும், "தலைவனும் தலைவியும் மூப்புவருவதன் முன் துறப்பார்" (கலி. 22 - ந) என்பதும் ஈண்டறிதற்பாலன.

2-3 பெயரெச்சம் உடனடுக்கி வந்து முடிந்ததற்கும் (நேமி. 46 - உரை) மறையாயடுக்கி வந்ததற்கும் (இ - கொ. சூ. 120; பிரயோக. சூ. 39- உரை) 'புரைதீரா, மன்னாவிளமை' என்பது மேற்கோள்.

4\. இன்னாங்கு, ஒருசொல்; 'பட்டாங்கு' என்பது போல.

மூ. "வேண்டி னுண்டாகத் துறக்கத் துறந்தபி, னீண்டியற் பால பல" குறள், 342; சிறுபஞ்ச. 24.

12\. நட்புநா ரற்றன நல்லாரு மஃகினா
ரற்புத் தளையு மவிழ்ந்தன—வுட்காணாய்
வாழ்தலி னூதிய மென்னுண்டாம் வந்ததே
யாழ்கலத் தன்ன † கலுழ்.

1\. நல்லார் - மகளிர்; "நல்லா, ளுடன்படிற் றானே பெருகும்" என்றார் பிறரும்.

2\. அற்புத்தளை : மென்றொடர்க்குற்றியலுகரமொழியின் மெல்லொற்று (வேற்றுமைக்கண்ணும்) அவ்வழிக்கண்ணும் வருமொழி முதலில் வலிவந்த விடத்துக் கிளைவல்லொற்றாயதற்கு (தொல். குற்றியலுகரம். சூ. 9 - ந; நன்-மயிலை. சூ. 183; நன் - வி. சூ. 184) மேற்கோள்.

3 - 4. வந்ததே......... கலுழ்: "ஆழ்கல மாந்தர்போல வணிக ரழுங்கிற் றன்றே", "பேதுசெய் பிணிப் பெரும்புலி பாய்ந்திடப் பிணமா, மோதைமாக் கட லுடை கலத்த வருற்ற துறவே", "உயர் நாவாய், கண்ணார் கடன் மண்டிக் காற்றிற் கவிழுங்கால்......... மக்களுறுந் துன்ப, நண்ணா நரகத்தி னான்காமடி யன்றே" (சீவக. 1163,2759,2793), "கலங்கவிழ்த்த நாய்கன்போற் களைதுணை பிறிதன்றிப், புலம்புமென்னிலை" (யா - வி. செய். சூ. 33; யா - கா. செய். 12; இ - வி. சூ. 738, 'மணிகிளர்' மேற்கோள்), "காற்றத் திடைப்பட்ட கலவர்

மணம்போல, வாற்றத் துளங்கா நிற்ப ஞழிவலவா '' (பெரியதிருமொழி, 11. 8: 1) என்ற இடங்களையும் நோக்குக.

(பி - ம்) † ' கலி '

13. சொற்றளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப்
பற்கழன்று பண் டம் பழிகாறு—மிற்செறிந்து
காம நெறிபடருங் கண்ணினார்க் கில்லையே
யேம நெறிபடரு மாறு.

1. சோர்ந்த நடையினராய் - தம்மையறியாமல் சரீரத்திருந்து வடிகின்ற மலங்களையுடையராய்; தளர்ந்தநடையினராயென்பாருமுளர்.

2. பண்டம்-(உடலாகிய) பொருள்; " பண்ட மறியார் படுசாந்துங் கோதையுங், கண்டொ ராட்டுவர் ", " தம்மையோர், பண்டத்துள் வைப்ப திலர் " (நாலடி. 48, 50) என்புழியும் காண்க.

3. கண்ணினார் - புல்லறிவாளர்; கண் - கருத்துமாம்.

மு. " முதுகு பற்றிக் கைத்த லத்தால் முன்னொர் கோலூன்றி, விதிர்வி திர்த்துக் கண்சு ழன்று மேற்கிளை கொண்டிருமி, யிதுவென் னப்பர் மூத்த வாறென் றிளையவ ரேசாமுன் " (பெரியதிருமொழி, 1. 3 : 2), "ஒழுகிய நடையு நீரு முதலகை யிகப்ப வூறு, மழுகலிவ் வள்ளல் யாக்கை யகம்புற மாயிற் றாயின், கழுகொடு கவருங் காக்கை கைதடி கொண்டுகாத்து, மழகுள சுழலுமன்றோ வாயிரச் சாதி மாதோ " சூளா. துறவு. 11.

14. தாழாத் தளராத் ‡ தலைநடுக்காத் தண்டூன்றா
வீழா விறக்கு மிவண்மாட்டுங்—காழில்லா
மம்மர்கொண் மாந்தர்க் கணங்காகுந் § தன்கைக்கோ
லம்மனைகோ லாகிய ஞான்று.

2. விறத்தல் - வெருவுதல்; " விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும் " (தொல். உரி. சூ. 50); இறக்குமெனப்பிரித்தலுமாம்.

1 - 2. காழ் - அறிவின்றிட்பம்; " தளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி, வளைந்த யாக்கை மறையோன் " (சிலப். 15: 44 - 5; மணி. 14 : 30 - 31) என்றார் பிறரும்.

3. மம்மர்கொள் - மயக்கங்கொண்ட. ' மாந்தர் ' நித்தியபகுவ்சனமென்பார், " அறைக்கண் மாந்தனுக் கதிதியங் தொழிலினி லமைந்தார் " (சூளா. தூது. 40) என்புழி ஒருமையில் வந்ததற்கு யாது கூறுவரோ அறியேம். அணங்காகும் - காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமாகும்; குறள், 918 - பரிமேல்.

3 - 4. தன்கைக்கோல் அம்மனை கோலாகிய ஞான்று - இவள் கையிற்றண்டு இவள்தாய் கையிற்றண்டாகிய நாளில்; [இவள் இளையாளாயிருந்தகாலத்தில்]

(நாலடி. 17). உயர்திணைப்பெயர், குறிப்பினாற் பெண்பாலொழித்து வந்தற்கு (நன் - மயிலை. சூ. 351) மேற்கோள்.

(2) விறக்குமிவண்மாட்டும் (3) மம்மர்கொள் மாந்தர்க்கு (இவள்) தன் கைக்கோல் (4) அம்மனைகோலாகிய ஞான்று (3) அணங்காகும் எனக்கூட்டுக.

மூ. கருத்து: நாலடி. 17; "தாழாத்தளரா......ஞான்று" என்பது; பிறர்மாட்டு மூப்புப்பற்றி யிழிப்புப் பிறந்தது" தொல். மெய்ப்பாடு. சூ. 6 - இளம்.

(பி - ம்) ‡ 'தலைநடுங்கா' § 'தங்கைக்கோலம்மனைக்கோல்'

15. எனக்குத்தா யாகியா ளென்னையீங் கிட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றா—டனக்குத்தா
யாகி யவளு மதுவானாற் றாய்த்தாய்க்கொண்
டேகு மளித்திவ் வுலகு.

2. தனக்கு - அவள் தனக்கு.

2 - 3. தாயாகியவளும் - தாயாயிருந்தவளும். தாய்த்தாய்க் கொண்டு—ஒரு தாய் மற்றொரு தாயைத் தேடிக்கொண்டு.

மூ. "உழந்துழந்து கொண்ட வுடம்பினைக் கூற்றுண்ண, விழைந்திழைந் தெங்கணுந் தோன்றிச்—சுழன்றுழன்ற, சுற்றத்தா ரல்லாதா ரில்லைகா ணன்னெஞ்சே, செற்றத்தாற் செய்வ தெவன்" (அறநெறி. 102). அளித்துலகு - ஏழையுலகு.

16. வெறியயர் வெங்களத்து வேன்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுள குண்டன்ன மன்றோ மகிழ்ச்சி
யறிவுடை யாளர்க ணில்.

1. வெறியயர்தல் - ஆவேசங்கொண்டாடுதல்; "வேலன் றைஇய வெறி யயர் களனும்" (முருகு. 222), "வேலனர் வந்து வெறியாடும் வெங்களத்து" சிலப். 24-'வேலனார்'.

2. நறுங்கண்ணி: "புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த, மலரா மாலை" புறம். 33.

3. குளகு - இலைமேயும் விலங்குணவு.

மூ. இச்செய்யுளோடு, நாலடி. 331-ஆம் செய்யுள் ஒப்பிடற்பாலது.

17. பனிபடு சோலைப் பயன்மர மெல்லாங்
கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை—நனிபெரிதும்
வேற்கண்ண ளென்றிவளை வெஃகன்மின் மற்றிவளுங்
கோற்கண்ண ளாகுங் குனிந்து.

2. "காய் முதிர்கனியி னூழ்த்து வீழுமிவ் வியாக்கை" சீவக. 1435.

2 - 3. மற்று - பிறகு. நனிபெரிதும்......வெஃகன்மின் : (நன்-மயிலை. சூ.397) மேற்கோள்.

4 ஊன்றுகோலாகிய கண்ணிணையுடையளாவள்; "வேற்கண் மடவார் விழைவொழிய யாம்விழையக், கோற்க ணெறிகாட்டக் கொல்கூற் றுழையதாம்" (வளையாபதி) என்னும் செய்யுளை ஒப்பிடுக.

மூ. கருத்து : நாலடி. 14.

18. பருவ மெனைத்துள பல்லின்பா லேனை
யிருசிகையு முண்டீரோ வென்று—வரிசையா
லுண்ணுட்டங் கொள்ளப் படுதலால் யாக்கைக்கோ
ரெண்ணு ரறிவுடை யார்

2. இருசிகை - மெல்லுணவும் வல்லுணவுமாகியவுணவுகள்; வலிதும் மெலிதுமாகிய கவளம் என்றுமாம்; நாலடி. 1.

19. ஆட்பார்த் துழலு மருளில்கூற் றுண்மையாற்
*றோட்கோட்புக் காலத்தாற் கொண்டுய்ம்மின்—பீட்பிதுக்
பிள்ளையைத் தாயலறக் கோடலான் மற்றதன் [கிப்
கள்ளங் கடைப்பிடித்த னன்று.

1-2. "கூற்றங்கொண் டோடத் தமியே கொடுநெறிக்கட் செல்லும் போழ்தி, றுற்றுணைக் கொள்ளீ ரழகலா லறிவொன்று மிலிரேபோலும்" (சீவக. 1550) என்பதை நோக்குக.

2. "தோட்கொட்பு - (ஆற்றுணவு); தோட்கொட்பாகிய அறங்களை; பொதிசோற்றுப்புடைவைமுடிச்சு நடக்குந்தோறுந் தோளின்கண்ணே சுழலுதலால் 'தோட்கொட்பு' என்றார்" என்பர் பதுமனார். "சிறுகாலையே தமக்குச் செல்வுழி வல்சி, யிறுகிறுகத் தோட்கோட்புக் கொள்ளார்" (நாலடி. 328); "செல்கதிக், காற்றுணைப் பெருதழு தலறி வீழுமே" சீவக. 2934. பீள் - கரு; கலி. 71.

(பி-ம்) *'தோட்கோப்பு'

20. மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா
னற்கா யுதிர்தலு முண்டு.

1. மற்றறிவாநல்வினை : "அறவினை மற்றறிவாம்" (நாலடி. 332); மற்றென்னுமிடைச்சொல் வினைமாற்றின்கட் காலம்பற்றிவந்ததற்கு (தொல்.

இடை. சூ 14-சே; பேர்; ந; நன் - மயிலை. சூ. 432; நன் - வி.சூ. 433; இ - வி. சூ. 266) மேற்கோள்.

2. கைத்து - கையகத்தாயபொருள் (குறள். 593) என்று பொருள்கூறி இவ்வடியை மேற்கோள் காட்டுவர் பரிமேலழகர்; "யாதுங், காவன்மின் கைத் துண்டாம் போழ்து" (நாலடி. 92) ஐகாரவீறு, வேற்றுமைக்கண் அத்துச் சாரியை பெற்று வந்ததற்கு. (தொல். குற்றியலுகரம். சூ. 78-ந) மேற் கோள்.

1-2. நாலடி. 272 : 3-4; "அன்றறிவா மென்னா தறஞ்செய்க" குறள். 36.

3. கனி (உதிர்தல்) ஒழிய - பழம் உதிராமலிருக்க.

மு. "இளமையு நில்லா யாக்கையு நில்லா, வளவிய வான்பெருஞ் செல்வமு நில்லா, புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்" (மணி. 22 : 135 - 38; 28 : 98 - 9), "மின்னு மிளமை யுளதா மெனமகிழ்ந்து, பின்னை யறிவென்றல் பேதைமை - தன்னைத், துணித்தானுந் தூங்கா தறஞ்செய்க கூற்றம், மணித்தாய் வருதலு முண்டு" (அறநெறி. 106) என்பன இங்கே அறியத்தக்கன.

---

## மூன்றும் அதிகாரம், யாக்கைநிலையாமை.

21. மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டார் * ரல்லா
ரெஞ்சினா ரிவ்வுலகத் தில்

1-2. நாலடி. 3 : 1-2; "மற்றவெங்கட களிற்றி னுதயக் கிரியின்மேல் மதிக வித்திட வுதித்திடு மருக்கனெனவே, கொற்ற வெண்குடை கவிப்ப மிசை கொண்டு" (கலிங்க. அவதாரம். 51); "மலைமிசை......குடையர் : என அள வடியானே வெண்பா வந்தவாறு" தொல். செய். சூ. 35-பேர்.

மு. "இமையவ ரமையலர்க் கடந்த, தாங்குமா வண்கைச் சக்கர மிக்குயர் பிறரும், யாங்க ளூரவ ரூரொடு பேரமக் குரையாய்" (சீவக. 2761), "கொலையானை மேலோர் குளிர்வெண் குடைக்கீழ்ப், பலயானை மன்னர். பலர்போற்ற வந்தான், மலையாகம் போழாக மற்றிவனே சாய்ந்தான், நிலையாமை சால நிலைபெற்ற தன்றே" சூளா. அரசு. 334.

(பி-ம்) * 'அல்லாரெஞ்சினார்'

22. வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம்
வீழ்நாள் படாஅ தெழுதலால்—வாழ்நா
ளுலவாமு னொப்புர வாற்றுமின் யாரு
நிலவார் நிலமிசை மேல்.

1. வயங்கொளி மண்டிலம் - சூரியமண்டிலம். 'வாழ்நாட்கு அலகாகிய (எண்ணுங் கருவி) பல கதிரையுடைய செல்வன்' (புறநா. 34 - உரை) என உரை நடையாக அமைந்திருத்தல் காண்க.

1-2. "தோற்றஞ்சால் ஞாயிறு நாழியா வைகலும்......அளந்து" நாலடி. 7.

3. ஒப்புரவு - யாவர்க்கும் ஒப்ப நடத்தல். : நாலடி. 37, 148; குறள். 213, 218.

23. மன்றங் கறங்க மணப்பறை யாயின
வன்றவர்க் காங்கே பிணப்பறையாய்—பின்றை
யொலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமா மாண்டார் மனம்.

1-3. "ஓரி னெய்தல் கறங்க வோரி, லீர்ந்தண் முழவின் பாணி ததும்பப், புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர், பைத லுண்கண் பனிவார் புறைப்பப், படைத்தோன் மன்றவப் பண்பிலாள, னின்று தம்மவிவ் வுலக, மினிய காண்கித னியல்புணர்ந் தோரே" (புறநா. 194); "மணமகனே பிணமகனாய் மணப் பறையே பிணப்பறையா, யணியிழையார் வாழ்த்தொலிபோ யழுகை யொலி யாய்க் கழியக், கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின் வரும் பயனை, யுணர்வுடை யார் பெறவருணர் வொன்றுமிலார்க் கொன்றுமிலை" (திருவிளை. பழியஞ்சின 40), "மணவணி யணிந்த மகளி ராங்கே, பிணவணி யணிந்துதங் கொழுநரைத் தழீஇ, யுடுத்த வாடை கோடி யாக, முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர்" (வேற்றிவேற்கை) என்பன ஈண்டறிதற்பாலன.

24. சென்றே யெறிப வொருகால் சிறுவரை
நின்றே யெறிப பறையினை—நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுண் மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து.

1. ஒருகால் – ஒருநிலை.

2. இவ்வடி, நன்றீற்று ஏ தீதென்னுங் குறிப்புணர்த்தியதற்கு (தொல். இடை. சூ. 34 - ந) மேற்கோள்; காண், கட்டுரைச்சுவைபட வந்தது; அசையென் பாருமுளர்.

1-2. "வெண்பாவினுள், 'சென்றே......நன்றே காண்' எனப் பன்னிரண் டெழுத்தடியொன்றனையும் இருகாற்சொல்லி எதுகைகொள்ளுங்கால், அடி யோடடிக்கூட்டத்துத் தளைவகை சிதையாது தொடைப்பகுதியுட்பட்டவாறு காண்க" தொல். செய். சூ. 34: பேர் ; ந.

3. "சென்றேயெறிப......சுமந்து : இதனுள், நன்றேகாணென்பது தீதே காணென்னுங் குறிப்புணர்த்திற்று" தொல். இடை. சூ. 33 - பேர்.

25. கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டு—மணங்கொண்டீண்
டுண்டுண்டுண் டென்னு முணர்வினார்ச் சாற்றுமே
டொண்டொண்டொ ணென்னும் பறை.

(1) கல்லென்று (4) டொண்டொண்டொண், ஒலிக்குறிப்பு.
2. உண்டுண்டுண்டு, துணிவுபற்றி மூன்றடுக்கிவந்தது ; நன் - வி. சூ. 395.

26. நார்த்தொடுத் தீர்க்கிலென் னன்றாய்ந் தடக்கிலென்
† பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டக் கால்.

1. "நன்றாய்ந்தடக்குதல் — நன்றாகத் (தகனஞ்செய்து) அத்திகளைப் பொறுக்கியெடுத்து அடக்கம்செய்தல். நன்றாகஆராய்ந்து அற்றமடக்கினா லென்னை" (பதுமனார்)

2. பாத்து உழிப்பெய்தல் - (பூமியை) பகுத்து (நீளமாகத் தோண்டி) அதனுள்ளே போகட்டுப் புதைத்தல்.

3 - 4. "தோற்பையு ணின்று......புறப்பட்டக்கால்' என்னும் நாலடியாருள், கூத்தன் - உயிர்க்கூத்தன்" பிரயோக. சூ. 49 - உரை ; அறநெறி. 219.

3. தோற்பை :— "உறுப்புக் கடாமுடன் கூடி யொன்றாயிருந்த பெரும்பை" குண்டலகேசி.

மு. ரகரவொற்றிடை வந்த ஆசிடையெதுகைக்கு (யா - வி. தொடை. சூ. 37) மேற்கோள் ; "காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென், பாற்றுளிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென், தோற்பையு ணின்று தொழிலறச் செய் தூட்டுங், கூத்தன் புறப்பட்டுப் போனவிக் கூட்டையே" மந்திரமாலை.

(பி - ம்) † 'பார்த்துளிப் பெய்யில்', 'பாற்றுளி பெய்யிலென்'

27. படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றந்
தீர்ப்பேம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்.

1 - 2. "மின்னுமொக் குளுமென" (சீவக. 2754), "விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கையை" (கம்ப. அயோத்தி. கிளைகண்டு. 79), "நீரிற்குமிழி நீர்மேலெழுத்து" (பட்டினத்தார்), "நீரிற்குமிழி பூணமைத்து நின்றாலு நில்லாமெய், பார்க்கு மிடத்திதன்மேற் பற்றுநா ளெந்நாளோ" (தாயுமானவர்), "பேணமார் வெள்ளநீரிற் பிறந்திடுங் குமிழிபோலும்" தசேலோபாக்கியானம்.

28. யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற
யாக்கையா லாய பயன்கொள்க—யாக்கை
மலையாடு மஞ்சுபோற் றோன்றிமற் றாங்கே
நிலையாது நீத்து விடும்.

1. யாப்பு - உறுதி.
3. மலையாடு மஞ்சு - மலைமேலசையும் மேகம்.
மூ. நாலடி. 29.

29. புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை—யின்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றா னெனப்படுத லான்.

2. இன்னினி - இப்பொழுதே.

3 - 4. "நின்றான்.........சென்றான்' முற்றுச்சொல்லடுக்கி முடிக்கும் பெயர்வெளிப்படாது நின்றமைக்கு (தொல். எச்ச. சூ. 33 - ந) மேற்கோள்.

மூ. தேகமநித்தியமென்பதற்குப் பிரமாணம் : (அவிரோதவுந்தியார், 20) யாக்கையாவது அநித்தியமாதலின் விரைந்தறஞ்செய்ய வேண்டுமென்பதற்குப் பிரமாணம் : கொலைமறுத்தல், 22 - உரை.

30. கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவரான் மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து.

மூ. "அலங்க லஞ்சினைக் குடம்பைப் புல்லெனப், புலம்பெயர் மருங்கிற் புள்ளெழுந்தாங்கு, மெய்யிவ ணொழியப் போகியவர்" (அகநா. 113), "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே, யுடம்பொ டுயிரிடை நட்பு" (குறள். 338) என்பவற்றை ஒப்பிடுக.

---

## நான்காம் அதிகாரம், அறன்வலியுறுத்தல்.

31. அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப்
புகத்தாம் பெறாஅர் புறங்கடை பற்றி
மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத்
† தவற்றாற் றவஞ்செய்யா தார்.

1. அண்ணாத்தல் - தலைநிமிர்தல்.

3 - 4. மேலே......செய்யாதார்: "தவமுந் தவமுடையார்க் காகும்" (குறள். 262) என்பதும், "பயனேயன்றித் தவந்தானும் உண்டாவது முற்றவமுடையார்க்கே" என்னும் பரிமேலழகர் உரையும் ஈண்டறிதற்பாலன.

மூ. இச்செய்யுளுடன் "இலர்பல ராகிய காரணம் நோற்பார், சிலர்பலர் நோலா தவர்" (குறள். 270), "வித்தி நல்லறம் விளைந்த வதன்பயன், றுய்ப்போர் தம்மனைத் துணிச்சித ருடுத்து,வயிறுகாய் பெரும்பசி யலைத்தற் கிரங்கி, வெயிலென முனியாது புயலென மடியாது, புறங்கடை நின்று புன்கண் கூர்ந்துமுன், னறங் கடை நில்லா தயர்வோர் பலரால்" (மணி. 11 : 108-13), "மாசித்திங்கண் மாசினசின்னத் திணிமுள்ளி, னூசித்துன்ன மூசியவாடை யுடையாகப், பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக், கூசிக்கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார்" (சீவக. 2929), "மேலைத்தவத்தளவே யாகுமாந் தான் பெற்ற செல்வம்" (மூதுரை, 7) என்பவற்றை ஒப்பிடுக.

(பி - ம்) † 'தவத்தால்'

32. ஆவாநா மாக்க நசைஇ யறன்மறந்து
போவாநா மென்னாப் புலைநெஞ்சே—யோவாது
நின்றுஞற்றி வாழ்தி யெனினுநின் வாழ்நாட்கள்
சென்றன செய்வ துரை.

1. ஆவாம் - மேலாகக்கடவோம் ; "ஆதுநாமென்னுமவர்" (நாலடி. 181) "ஆஅதுமென்னுமவர்" (குறள். 653) என்பவற்றை நோக்குக.

2. புலை - கீழ்மை.

33. வினைப்பயன் வந்தக்கால் வெய்ய வுயிரா
மனத்தி னழியுமாம் பேதை—நினைத்ததனைத்
தொல்லைய தென்றுணர் வாரே தடுமாற்றத்
தெல்லை யிகந்தொருவு வார்.

மூ. நாலடி. 52; "பண்டுருத்துச் செய்த பழவினைவந் தெம்மை, யின்றுறுக் கின்றதெனவறியார்—துன்புறுக்கு, மேவலரை நோவதென்" பழ. 191.

34. அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தாற்
பெரும்பயனு மாற்றவே கொள்க—கரும்பூர்ந்த
சாறுபோற் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோற் போகு முடம்பு.

2. கரும்பூர்ந்த - கரும்பினை நெருக்கிக்கொள்ளப்பட்ட.

1-2. "தோற்ற மரிதாய மக்கட் பிறப்பினா, லாற்றுந் துணையு மறஞ்செய்க." (பழ. 365), "அரிதரிது மானிடராத லரிது", "மக்க ளுடம்பு பெறற்

கரிது பெற்றபின், மக்க ளறியு மறிவரிது - மக்க, ளறிவறிந்தா ரென்பா ரறத்தின் வழுவார், நெறிதலை நின்றொழுகு வார்" (அறநெறி, 212), "பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுட், டிரைசெய் தென்கட லிட்ட தோர் நோன்கழி சிவணி, யரைச வத்துளை யகவயிற் செறிந்தென வரிதாற், பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே" (சீவக. 2749), என்பவற்றை ஒப்பிடுக. இத்தேகம் இன்றியமையாதென்பதற்குப் பிரமாணம் : அவிரோதவுந்தியார், 20.

4. நாலடி. 106 : 4.

மூ. "வினைபல வலியினாலே வேறுவே றியாக்கை யாகி, நனிபல பிறவி தன்னுள் துன்புறூஉம் பல்லுயிர்க்கு, மனிதரி னரியதாகுந் தோன்றுதல் தோன்றி னாலு, மினியவை நுகரவெய்துஞ் செல்வமு மன்னதேயாம்", "உயர்குடி நனியுட் டோன்ற லூனமில் யாக்கையாதல், மயர்வறு கல்விகேள்வித் தன்மையால் வல்லராதல், பெரிதுணர் றறிவேயாதல் பேறறங் கோட லென்றாங், கரிதிவை பெறுத லேடா பெற்றவர் மக்க ளென்பார்" வளையாபதி.

35. கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார்
வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்காற் பரிவ திலர்.

1. கட்டி - பாகு. சிறுகாலை - முற்காலம்.

2. துரும்பு - கோது.

3. உடம்பின் பயன் கொள்ளல் - தருமம் தவமுதலிய நற்காரியங்களைச் செய்து அதனாலாய இன்பத்தை நுகர்தல்.

3-4. "செய்ப வெல்லாஞ் செய்தன னாகலி, னிடுக வொன்றோ சுடுக வொன்றோ, படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் றலையே" (புறநா. 239 : 19-21) என்பதும், "அதிசோக மொடயலார்களைப் போலடுங் கூற்றம் வந்தான், மதிசோர் தரமயங் கிக்கிட வோமலர் மேனடந்தார், துதிசே ரிணையடி யாந்துணை யோடவர் தொல்லறமாம், பொதிசோ றுடைய மிடையோ மினித்தனிப் போ நெறிக்கே" (திருநூற்று. 57) என்பதும் "இதனால் உடம்பின் பயன் பெற்றோமென்பதாம் ; உடம்பின்......பரிவதிலர், என்றாகலின்" என்னுமதனுரையும் இங்கே அறிதற்பாலன; திருநூற்றந்தாதி, 68-ஆம் செய்யுளுரையில் இவ்வடிகள் "உடம்பின் பயன் கொண்டவராதலாலே கூற்றமுட்கார்" என உரை நடையாய் அமைந்துள்ளது.

மூ. மதுரைக்காஞ்சி, 632-3-ந, மேற்கோள்.

36. இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி

யொருவுமின் றீயவை யொல்லும் வகையான்
மருவுமின் மாண்டா ரறம்.

1. எட்டெழுத்தான் வந்த அடிக்கும் (தொல். செய். சூ. 54-இளம்), முற்றெதுகைக்கும் (ஷை ஷை ஷை-93-ந) மேற்கோள்.

3 - 4. "ஒல்லும் வகையா னறவினை யோவாதே, செல்லும்வா யெல்லாஞ் செயல்" (குறள். 33) என்பதும் "இயலுந்திறமாவது-இல்லறம் பொருளளவிற்கு ஏற்பவும், துறவறம் யாக்கைநிலைக்கு ஏற்பவும் செய்தல்" என்ற பரிமேலழகருரையும் கருதத்தக்கன.

மூ. கருத்து:—"நாளைச் செய்குவ மறமெனி னின்றே, கேள்வி நல்லுயிர் நீங்கினு நீங்கு, மிதுவென வரைந்து வாழுநா ளுணர்ந்தோர், முதுநீ ருலகின் முழுவது மில்லை" (சிலப். 28 : 179 - 82), "கொள்ளுங் கொடுங் கூற்றங் கொல்வான் குறுகுதன்மு, னுள்ளங் கனிந் தறஞ்செய் துய்கவே" (நன்னெறி. 30), இது பலவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பாவிற்கு (யா - கா. செய். 5) மேற்கோள்; இருவிகற்பத்தான் வந்ததென்பர் இலக்கணவிளக்கவுரையாசிரியர் இ. வி சூ. 730

37. மக்களா லாய பெரும்பயனு மாயுங்கா
லெத்துணையு மாற்றப் பலவானுற்—றொக்க
†வுடம்பிற்கே யொப்புரவு செய்தொழுகா தும்பர்க்
கிடந்துண்ணப் பண்ணப் படும்.

3. ஒப்புரவு - தக்கன ; நாலடி. 22, 148 ; குறள். 213, 218, 220.
(பி - ம்) † 'உடம்புக்கீக'

38. உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
யிறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்.

1. உறக்குந்துணையது - [உறத்தல் - செறித்தல்] உறங்குவதுபோல அடங்கியிருப்பதாகிய; "உகிர்ப்புரை புக்கோர் தம்மை யுகிர்களா லுறக்கு மூன்றி" இராமவதாரம்.

1-2. பிறபொருளாக்கம்பற்றியவியப்பென்னும் மெய்ப்பாட்டிற்கு(தொல். மெய்ப்பாடு. சூ. 7 - பேர் ; இ - வி. சூ. 578) மேற்கோள்.

3 - 4. "பொருளளவு, தான்சிறிதாயினும்...போர்த்துவிடுமாகலின், 'இனைத்துணைத்தென்ப தொன்றில்லை' என்றுங் கூறினர்." (குறள். 87 - பரிமேல்); "தான்சிறிதாயினும்........,போர்த்துவிடும்: இஃது ஏற்றற்சிறப்பு" (தொல்

புறத்திணை. சூ. 20 - ந), "பார்த்தெதிர், வியந்தவர் வெருக்கொள விசும்பி ஞேங்கினு, னுயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே" இராமவதாரம், வேள்வி. 35; குறள். 87, 105; திருவிளை. நாடு. 16.

மூ. "உறக்குந்துணை......விடும்: என்பதனுள் உம்மை இசைநிறையாயிற்று" (தொல். இடை. சூ. 46 - பேர்), "தெள்ளிய வாலின் சிறுபழத் தொருவிதை, தெண்ணீர்க் கயத்துட் சிறுமீன் சினையினு, நுண்ணிதே யாயினு மண்ணல் யானை, யணிதேர் புரவி யாட்பெரும் படையொடு, மன்னர்க் கிருக்க நிழலாகும்மே" நறுந்தொகை.

39. வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்.

1. "சொல்லினென்பது - இருவழியும் மிகையாயினும், சொற்பொருட் பின்வருநிலையென்னும் அணிநோக்கிவந்தது, 'வைகலும் வைகல் வரக் கண்டும்' என்பதுபோல" (குறள். 200 - பரிமேல்), "ஒருசொல்லே மிகுத்து வருதலின் ஏந்தல்வண்ணமென்றாயிற்று; அது, 'வைகலும்......அஃதுணரார்' எனவரும்" (தொல். செய். சூ. 232 - பேர்; 6 - ந), "கூறியதுகூறன் முன்வைத்ததென்னையெனின் அது நூலுட்போலச் செய்யுட் கண்ணும் பயன்படவரின் அமையுமென்றற்கென்பது; அவை, 'வைகலும்......உணரார்' எ - ம்,...எனவும், சொல்வகையான் இரட்டித்தவாறு" தொல். மரபு. சூ. 108-பேர்; நன் - வி. சூ. 95.

4. வைகல் - நாள் கழிதற்குக் காரணமான சூரியோதய அஸ்தமனங்கள். "வைகல் நாளும் வைகின்றே" (சீவக. 156) என்பதும், 'நாள்கள்தோறும் நாள் கழியா நின்றது' எனும் நச்சினார்க்கினியர் வாக்கியமும் அறியத்தக்கன.

மூ. வழிமோனைக்கும் (தொல். செய். சூ. 93-பேர்; ந), ஒருவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பாவிற்கும் (யா-வி. செய். சூ. 4; யா-கா. செய். 5; சிதம்பரப்பாட்டியல், செய். 1; இ - வி. சூ. 730), சொற்பொருட்பின்வரு நிலையணிக்கும் (தண்டி. சூ. 41; வீர. அலங்கார. சூ. 28) மேற்கோள். 'இஃது அகவல்வெண்பாவென்று அணியியலுடையார் காட்டிய பாட்டு' யா - வி. செய். சூ. 4.

40. மான வருங்கல நீக்கி * யிரவென்னு
மீன விளிவினுல் வாழ்வேன்மன்—னீனத்தா
லூட்டியக் கண்ணு முறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனின்.

2. "ஈண விழிவிஞன் வாழ்வேன் மன் : என்பது கழிவின்கண் வந்தது" நேமி. சூ. 53.

ழ. குறள், 1063 ; "மானமழிந்தபின் வாழாமை முன்னினிதே" (இனியது 14), "மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை, பீடழிய வந்த விடத்து", "மயிர்நீப்பின் வாழாக் கவரிமாவன்ன, ருயிர்நீப்பர் மானம் வரின்", "இளிவரின் வாழாத மான முடையா, ரொளிதொழு தேத்து முலகு" (குறள் 968-970), "தம்முடை யாற்றலு மானமுந் தோற்றுத்த, மின்னுயி ரோம்பினு மோம்புக—பின்னர்ச், சிறுவரை யாயினு மன்ற தமக்காங், கிறுவரை யில்லை யெனின்" (நீதிநெறி. 41), "இலமென்னும், வன்மையின் வன்பாட்ட தில்" "இன்னுமை வேண்டி னிரவெழுக" நான்மணி. 17,31.

(பி - ம்) * 'இவுழ்'

---

## ஐந்தாம் அதிகாரம், தூய்தன்மை.

41. *மாக்கேழ் மடநல்லா யென்றரற்றுஞ் சான்றவர்*
*நோக்கார்கொ னொய்யதோர் புக்கிலை—யாக்கைக்கோ*
*ரீச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே*
*காக்கை கடிவதோர் ‡ சொல்.*

1. மாக்கேழ் - மாமை நிறம் ; மாந்தளிர் போன்றநிறமெனலுமாம். மடம் - மென்மை. அரற்றும் - பலகாற்சொல்லும். சான்றவர் - பெரியோர் ; ஈண்டு இகழ்ச்சிக்குறிப்பு ; எதிர்மறையிலக்கணை.

2. நொய்யது - சீர்மையில்லாதது. புக்கில் - (உயிர்) புகுந்தவீடு - உடம்பு ; மோக்ஷமெனினுமமையும். [துச்சில் என்பது பாடமாயின் - ஒதுக்கிடம் என்க ; குறள். 340]

4. காக்கை கடிவதோர் சொல்.

ழ. கருத்து : "ஒழுகிய நடையு நீரு முதலைகை யிகப்ப வூறு, மழுகலிவ் வள்ளல் யாக்கை யகம் புற மாயிற் றுயிற், கழுகொடு கவருங் காக்கை கடிதடி கொண்டு காத்து, மழகுள சுழல மன்னோ வாயிரச் சாதி மாதோ" (சூளா. துறவு. 11) என்பதை ஒப்பிடுக.

(பி - ம்) ‡ 'கோல்'

42. *தோற்போர்வை மேலுந் துளைபலவாய்ப் பொய்ம்மறைக்கு*
*மீப்போர்வை மாட்சித் துடம்பானுன்—‡ மீப்போர்வை*
*பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்*
*பைம்மறியாப் பார்க்கப் படும்.*

1-2. உடம்பு மீப்போர்வை மாட்சித்து ஆனுல் - உடம்பு மேற்போர்த்த போர்வையான் பெருமையுடைத்து ஆதலால்.

3. அதனை - அவ்வுடம்பை.

2-3. மீப்போர்வை பொய்ம்மறையாக் காமம் புகலாது - அம் மேற் போர் வையால் உள்ளுள்ள பொல்லாங்குகளை மறைத்துக் காம நுகர்ச்சியை விரும்பாமல். காமம்புகலாகாது - காமம் புணர்துரையாது ; "காமஞ் செப்பாது" (குறுந். 21), "காமஞ் செப்பிக் கண்ணினு லிரப்பார்" சீவக. 2549.

4. பைம்மறியாப் பார்த்தல்: "மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து, மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்" (மணி. 4 : 120 - 121), "பைம்மறியா நோக்கப் பருந்தார்க்குந் தகைமைத்து" (இறை., சூ. 1 - உரை), "உடலை உட்புறம் நோக்கி அசுசித்துவம்பாவிப்பதல்லது" (திருநூற்று. 68 - உரை), "உயிர்... ...பைம்மறியாப் பார்ப்பாருக்கு நரம்பு நாடி முதலியவை யாகாது அவற்றின் வேறுமாயினுற்போல" (சிவஞானபோதமாபாடியம், சூ. 12, அதிகரணம், 4), "பைம்மறிப் படுப்பி னுள்ளறி யாமற் பணிநறுந் துகில்புனை மடவார், மெய்ம்மிசைக் கருந்தோல் கண்டுவந் துழலும் வினையினேன்" சோணசைல. 67. பார்க்கப்படும் - பார்க்கின், (துறவுக்கு முயலத்தக்க துணிவு) உண்டாகும். பார்த்தல் - தகுதியெனலுமாம்.

(பி - ம்) ‡ 'தோற்போர்வை.'

43. தக்கோலந் தின்று தலைநிறையப் பூச்சூடிப்
பொய்க்கோலஞ் செய்ய வொழியுமே—யெக்காலு
† முண்டி வினையு ளுறைக்கு மெனப்பெரியோர்
கண்டுகை விட்ட மயல்.

1. பெயர்ச்சொலொன்றே நின்று ஒழிந்த தன் இனங்களைத் தழுவியவ தற்கு (நன் - மயிலை. சூ. 357) மேற்கோள். தக்கோலம் - வால்மிளகு ; "தக் கோலந் தீம்பூத் தாகைசா லிலவங்கங், கப்பூரம் சாதியோ டைந்து"

2 - 3. சோற்றுலடித்த சுவர். உறைக்கும் - புறப்படப்பொழியாநிற்கும்.

3 - 4. உண்டியைக் கைவிடுதற்கேதுவாகிய. மயல் - செத்தை ; "வம்புண் கோதயர் மாற்று மயலரோ" (சீவக 128). என்பதற்கு இவ்வடியை மேற்கோள் காட்டுவர் நச்சினார்க்கினியர். மயல் - புல்லென்பாருமுளர்.

ழ. யகர வொற்றிடைவந்த ஆசிடை யெதுகைக்கு (யா - வி. தொடை. சூ. 5) மேற்கோள் ; "மெய்ப்படு சாந்தும் பூவு மிகநனி கமழு மேனுங், கைப்படு சாந்தும்பூவுங் கொண்டலாற் கலக்க லாகா, வைப்படு பித்து நெய்த்தோர சும்புசோ ரழுகற் புன்றோற், பொய்ப்பட வுரைத்த துண்டோ பொன்னனீர் நம்மு ளுமால்" (சீவக. 29381), "முருகு புத்தப் புதும லர்ப்பொற் புற முடிக்கிற் கமழுமே, கருகு காற்றைக் குழலொழிக்கிற் பழைய சிக்குக் கமழுமே." மோகவதைப்பரணி.

(பி - ம்) † 'உண்டிவினையுள்'

44. தெண்ணீர்க் குவளை பொருகயல் வேலென்று
கண்ணில்புன் மாக்கள் கவற்ற விடுவேனு

வுண்ணீர் களைந்தக்கா னுங்குருன் றிட்டன்ன
கண்ணீர்மை கண்டொழுகு வேன்.

1 - 2. "வேலொப் பனவெங் கணையொப் பனவஞ், சேலொப் பனசே யரிசிந் தியகண்" என்றார் பிறரும்.

2. கண் - அறிவு; "குன்றனு னுரைப்பக் கேட்டே பாகத்தார் குடும்ப நீக்கி, யின்று கண் விடுக்கப்பட்டேம்" (சீவக 1437) என்புழியும் காண்க. மாக்கள் - மனவுணர்ச்சியில்லாமல் ஐம்பொறியறிவுமட்டுமேயுடைய விலங்குபோன்ற ஒருசார் மானிடர்; "மாவு மாக்களு மையறி வினவே" (தொல். மரபு. சூ. 32). என்பதனாலும் அதன் உரையாலும் அறிக.

45. முல்லை முகைமுறுவல் முத்தென் றிவைபிதற்றுங்
கல்லாப்புன் மாக்கள் கவற்ற விடுவனோ
வெல்லாருங் காணப் புறங்காட் டுதிர்ந்துக்க
பல்லென்பு கண்டொழுகு வேன்.

2. அன்விகுதி, தன்மைக்கண் வருதற்கு (நன் - மயிலை. சூ. 330) மேற்கோள்.

1-2. "பல்லையென் று மென்பெறுது பவளமுட் பொதிந்த கூர், முல்லை யென்ப முறுவ லென்ப முத்த மென்ப பித்தரே" மோகவதைப்பரணி.

மு. முற்செய்யுளுடன் ஒப்பிடுக.

46. குடருங் *கொழுவுங் குருதியு மென்புந்
தொடரு நரம்பொடு தோலு—மிடையிடையே
வைத்த † தடியும் வழும்புமா மற்றிவற்று
ளெத்திறத்தா ளீர்ங்கோதை யாள்.

மு. கருத்து "என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சி மெத்திப், புன்புறந் தோலைப் போர்த்து மயிர்புறம் பொலிய வேய்ந்திட், டொன்பது வாயிலாக்கி யூன்பயில் குரம்பை செய்தான், மன்பெருந் தச்சனல்லன் மயங்கினார் மருள வென்றான்" (சீவக. 1577), "குடர்வழும்பு தொடர்நரம்பு குருதி யென்பு குழுவுமங், கடல்வழங்கு மயிர்மிகுந்த மகளி ரென்ப கவிகளே" (மோகவதைப்பரணி), "நாடியோ வென்போ நரம்போசீக் கோழையோ, தேடியெனை யறியேன்" (சிவஞானபோதவார்த்திகம், சூ - 9, அதி - 1), இழிப்புச் சுவைக்கு மேற்கோள் (வீர. அலங்கார. சூ. 28), "என்னை கண்டுநீ மாதரார் வடிவமீ திச்சைவைத் துழல்கின்றாய், பொன்னை யுந்துகி லையும்பிரித் திடின் வெறும் புழுமலக் கூடல்லாற், பின்னையுண்டு கொல்" என்பதற்கு (வைராக்கிய சதகம், 42) மேற்கோள்.

(பி - ம்) * 'கொழுப்பும்' † 'தடியுமுடம்பு மாமற்'

47. ஊறி யுவர்த்தக்க வொன்பது வாய்ப்புலனுங்
கோதிக் குழம்பலைக்குங் கும்பத்தைப்—பேதை
பெருந்தோளி பெய்வளா யென்னுமீப் † போர்த்த
கருந்தோலாற் கண்விளக்கப் பட்டு.

1. ஒன்பது வாய்ப்புலனும் - நவத்துவாரங்களினின்றும் ; அறநெறி. 209.

2. கோதி - (உள்ளேயுலாவுகின்றவாயுவாற்) சிதறப்பட்டு ; அலைக்கும் - வருத்துதற்கிடமான.

1-2. புலனும் குழம்பும் ஊறிக் கோதி அலைக்கும் கும்பம் எனக்கூட்டுக.

3. பெருந்தோளி ! பெய்வளாய் ! , விளி

4. **கண்** விளக்கப்படுதல் - தோன்றியுந்தோன்றாமையுமாகி மயங்கல் ; "உடலை உட்புறம்பாக நோக்கி அசுசித்துவம் பாவிப்பதல்லது கருந்தோலாற் கண் விளக்கப்படார்" திருநூற்று. 68 - உரை.

(பி - ம்) † 'போர்த்து'

48. பண்ட மறியார் படுசாந்துங் கோதையுங்
† கண்டுபா ராட்டுவார் கண்டிலர்கொன்—மண்டிப்
பெடைச்சேவல் வன்கழுகு பேர்த்திட்டுக் § குத்து
முடைச்சாகா டச்சிற் றுழி.

1. பண்டம் - உடல் ; ஈண்டு உடலின் தன்மையைக்குறித்தது; ஆகு பெயர். சீவக. 2621.

2. மேற்கதுவாயெதுகைக்கு (தொல். செய். சூ. 93 - ந) மேற்கோள்.

1 - 2. "புணவன நீங்கிற் புலால் புறத்திடுவது.........மக்கள் யாக்கை" மணி. 4 : 114-20 ; 18 : 136-9.

3. பேர்த்திட்டு—மறித்து மறித்து.

4. சாகாடு—சகடம்—வண்டி ; புறநா. 60 : 8 ; 90 : 7 ; 185 : 2 ; 256 : 2 ; குறள். 475. அச்சு - அச்சாணி ; "உயிரெனலுமாம் ; உணர்ச்சி யச்சாக வுசா வண்டியாக" (அறநெறி. 169) என்புழிப்போல.

(பி - ம்) † 'கொண்டு பாராட்டுவர்' § 'குத்தல்'

49. கழிந்தா ரிடுதலை கண்டார்நெஞ் சுட்கக்
குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி—யொழிந்தாரைப்
போற்றி நெறிநின்மி னிற்றிதன் பண்பென்று
சாற்றுங்கொல் சாலச் சிரித்து.

1. "கழிதல் - சாதல் ; 'கழிந்தாரிடுதலை' என்றார் பிறரும்" திருநூற்று. 33 - உரை.

2. "மா - கருமை. மாமிடறென்பது பண்புத்தொகையாய் இன்னதிது வென்னுந்துணையாய் நிற்றலானும், மைத்தழையாகின்றவென்பது அக்கருமையது

மிகுதியை உணர்த்தி நிற்றலானும், கூறியது கூறலாகாமையறிக. அது 'தாம மைரமீமிசை' எனவும் 'குழிந்தாழ்ந்தகண்ணை' எனவும் இத்தன்மைய பிறவும் வருவனபோல" (திருச்சிற். 102 - பேர்), "கண்டறிதல்: 'குழிந்தாழ்ந்த கண்' என்புழிப்போலச் சிறப்பின்கண் வந்தமீமிசை (சிவஞானபோதமாபாடியம், சூ. 6, அதிகரணம், 2, 4-ஆம் வெண்பா ; நன் - மயிலை. சூ. 397 ; நன் - வி. சூ. 398) மேற்கோள்.

50. உயிர்போயார் வெண்டலை யுட்கச் சிரித்துச்
செயிர்தீர்க்குஞ் செம்மாப் பவரைச்—செயிர்தீர்ந்தார்
கண்டிற் றிதன்வண்ண மென்பதனாற் றம்மையோர்
பண்டத்துள் வைப்ப திலர்.

1. வெண்டலை - மேல்தோலழிந்து என்புமாத்திரமாய் நிற்குந்தலை ; "வெண்டலைப் பயின்ற காட்டுள்" (சீவக. 304, 2619) என்புழியும் காண்க. உட்க - வெருவ.

2. செம்மாப்பு - இறுமாப்பு ; "வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு" (நாலடி. 331) ; "செம்மாந்து செல்லுஞ் செறுநர்" (பழ. 131) செம்மாப்பவர், ஒருசொல் ; 'இறுமாப்பவர், அல்லாப்பவர், ஏமாப்பவர், சோகாப்பவர்' என்பன போல.

3. கண்டு இற்று இதன் வண்ணம் என்க.

4. பண்டம் : நாலடி. 13,48

---

## ஆறாம் அதிகாரம், துறவு.

51. விளக்குப் புகவிருண் மாய்ந்தாங் கொருவன்
றவத்தின்முன் னில்லாதாம் பாவம்—விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாந் தீது.

2. "தொல்லை நல்வினை முற்படத் தோன்றிய, வல்லல் வெவ்வினை போல வகன்றதே" (சீவக. 343), "எல்லை யாரிரு ணல்வினை முன்னர்ப், பாவம் போலப் பறைந்துகை யகல" (பெருங். 1. 53 : 156 - 7), "போதமே லாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும்" (காஞ்சி. நாட்டுப்படலம், 12), "தேய்தல் - தன் பகையாகிய அறம் வளர்தலால் தனக்குநிலையின்றி மெலிதல் ; 'தவத்தின்முன் னில்லாதாம் பாவம்' என்பதூஉம் இப்பொருட்டு" குறள். 96 - பரி மேல்.

3-4. நல்வினை......தீது : "மேனை வினையுலப்ப வேறாகி வீழ்வர்" நாலடி. 3) என்பதன் குறிப்பைப் பார்க்க.

2-4. விளக்குநெய்......தீது : "விளக்கினுட் பெய்தநெய்யுந், திரியுஞ்சென் றற்ற போழ்தே, திரிச்சுடர் தேம்பி னல்லா லெரிமொய்த்துப் பெருகலுண்டோ

விருவினை சென்று தேய்ந்தாற், பரிவுற்றுக் கெடாமற் செல்வம் பற்றியா ரதனை வைப்பார்" (சீவக. 2316), "எல்லை யாரிரு ளைல்வினை முன்னர்ப், பாவம்போலப் பறைந்துக்கை யகல" (பெருங். 1. 53 : 155 - 6 ; ஷை. 3. 1 : 6 - 7) என்னும் செய்யுளை ஒப்பிடுக.

(பி - ம்) * 'விளக்கின்'

52. நிலையாமை நோய்மூப்புச் சாக்காடென் றெண்ணித்
தலையாயார் தங்கருமஞ் செய்வார்—தொலைவில்லாச்
சத்தமுஞ் சோதிடமு மென்றாங் கிவைபிதற் றும்
பித்தரிற் பேதையா ரில்.

2. "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வா மற்றல்லா, ரவஞ்செய்வா ராசை யுட் பட்டு" (குறள். 266) என்பதைநோக்குக.

1 - 2. கருத்து: நாலடி. 33 ; "நில்லாதவற்றை நிலையின வென்றுணரும், புல்லறி வாண்மை கடை" குறள். 331.

4. இன்னுருபு ஒப்புப்பொருளில் வந்ததற்கு (இ - கோ. சூ. 56) மேற்கோள்.

53. இல்ல மிளமை யெழில்வனப்பு மீக்கூற்றஞ்
செல்வம் வலியென் றிவையெல்லா—மெல்ல
நிலையாமை கண்டு ‡ நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு.

1. இல்லம் - குடிப்பிறப்பு. 'எழில் - எழுச்சி (குறள், 407); ஆவது, வளர்ந் தமைந்த பருவத்தும் இதுவளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல்' (தொல். பொருளியல், சூ. 53) என்பர் நச்சினார்க்கினியர் ; தோற்றப் பொலிவு என்பாருமுளர். வனப்பு - வடிவழகு, மீக்கூற்றம் - மேன்மை யான சொல்லாற் பிறந்த புகழ் (கலி. 87 ; நன் - வி. சூ. 178), மூதன்மை என் பாரு முண்டு.

3. நிலையாமை கண்டு நெடியார் துறப்பர் : குறள். 2661, 348. திருவள்ளு வப்பயனில், நிலையாமைக்குப்பின் துறவு வைத்திருத்தலும் நோக்கி மகிழத் தக்கது.

1 - 3. இல்லம்......கண்டு : நாலடி. 49, 50, 102 : 1-2 ; ஏலாதி. 20 ; "முடங்குட விளமை செல்வ முரண்வலி முதலா யுள்ள, வடங்கலு மகில முற்று மனித்தமென் றதுவே யன்றித், தொடங்கிய விடங்க டோறுந் துன்பமே யாகுந் தன்மை, யடங்கிய வறிஞ ராய்ந்த பரிசது மறைகுவன்" சிவஞானசரிதை ; அற நெறி. 89.

(பி - ம்) ‡ 'நொடியார்துறப்பார்த்தலையாயார்த்'

54. துன்பம் பலநா ளுழந்து மொருநாளை
யின்பமே காமுறுவ ரேழையா—ரின்ப
மிடைதெரிந் தின்னாமை நோக்கி மனையா
றடைவொழிந்தா † ரான்றமைந் தார்.

2. ஒ. நாலடி. 60 : 2; ஏழையர்-'நுழைந்த உணர்வினரன்றி வரும் வெண்மையினர்' (தொல். மெய்ப்பாடு. சூ. 26 - பேர்), "நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம் (251)" ஆதலால், அறிவிலார் 'ஏழையர்' எனப்பட்டார்.

2 - 4. நாலடி. 182; "இடைதெரிந்து - வேறுபட ஆராய்ந்து; 'இடைதெரிய' என்பதனை, 'இன்ப, மிடைதெரிந் தின்னாமை........ஆன் றமைந்தார் என்றாற்போலக் கொள்க" இ - வி. சூ. 570.

ஒ. நாலடி. 60; "சிறப்பறு நோயாற் றுன்பஞ் செடிகொண்மூப் பத னாற் றுன்ப, மறப்புறத் தியக்கஞ் செய்யு மாணவே தனையாற் றுன்பம், பிறப்பவ ரெக்காலத்தும் பெறுவது துன்ப மானாற், றுறப்பதே கருமம்" (துறுந்திரட்டு) அவிரோதவுந்தியார் 17 மேற்கோள்.

(பி - ம்) † 'ஆன்றவிந்தார்'

55. கொன்னே கழிந்தன் றிளமையு மின்னே
பிணியொடு மூப்பும் வருமாற்—றுணிவொன்றி
யென்னொடு சூழா தெழுநெஞ்சே போதியோ
நன்னெறி சேர நமக்கு.

1. 'கொன்' என்னுமிடைச்சொல், பயமின்மைப் பொருளுணர்த்தியதற்கும் (தொல். இடை. சூ. 6 - சே; பேர்; ந; இ - வி. சூ. 265), இடைச்சொல் விசேடித்து நிற்றற்கும் (தொல். எச்ச. சூ. 59, 60 - ந) மேற்கோள்.

1 - 2. நாலடி. 92 : 1 - 2. துணிவு : நாலடி. 127.

ஒ. "இளமை கழியும் பிணிமூப் பியையும், வளமை வலியிவை வாடு-மு ளநாளால், பாடே புரியாது......வீடே புரிதல் விதி" (ஏலாதி. 22) என்பதை நோக்குக.

56. மாண்ட குணத்தொடு மக்கட்பே றில்லெனினும்
பூண்டான் கழித்தற் கருமையா—† பூண்ட
மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார்.

3. மேன்முறை - முற்காலம்.

3 - 4. "மேன்முறை......அறிந்தார்' என்றவழிக் கடியென்பது வது வையின் வந்தது" (தொல். உரி. சூ. 73 - பேர்; நன் - மயிலை. சூ. 420) மேற்கோள்.

2 - 4. 'பூண்டான்.........கற்றறிந்தார்' சொல்லெச்சத்திற்கு (நன் - மயிலை. சூ. 359 ; நன் - வி. சூ. 360) மேற்கோள்.

மு. இச்செய்யுளை நாலடி, 364 ஆம் செய்யுளுடன் ஒப்பிடுக.

(பி - ம்) † 'பூண்டன், மிடி'

57. உளைக்கித்தாங் கொண்ட விரதங்க ளுள்ளுடையத்
தாக்கருந் துன்பங்க டாந்தலை வந்தக்கா
னீக்கி நிறூஉ முரவோரே நல்லொழுக்கங்
காக்குந் திருவத் தவர்.

1. உளைக்கி - ஒருப்பட்டு.

3. உரவோர் - அறிவினையுடையோர்; "உரன் - அறிவு; 'உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும்' (பதிற். 73.) என்றார் பிறரும்" கலி. 142-ந.

3-4. "நல்லொழுக்கங், காக்குந் திருவத்தவர்' என உகரவீறு வேற்றுமைக் கண் அத்துப்பெற்றது" தொல். குற்றியலுகரம். சூ. 78 - ந.

மு. அவிரோதவுந்தியார், 64 மேற்கோள்.

58. தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா—னும்மை
யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன்.

3. கொல், வினாவகையால் இரக்கமுணர்த்திற்று; "இடைச் சொற்கள் வேண்டிய பல பொருள்களையும் விளைத்தற்குரியன" என்னும் வழக்கால்.

2-4. "துன்பத்திற்கு நோதலாவது, 'உம்மை......வீழ்வர்கொல்' என்று பரிதல்" (குறள். 157 - பரிமேல்), "உண்ணாது நோற்பார் பெரியர் பிறர் சொல்லு, மின்னாச்சொ னோற்பாரிற் பின்" குறள், 160.

மு. வாகைத்திணையின் றுறைகளுள் ஒன்றாகிய 'பிழைத்தோர்த் தாங்குங் காவல்' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 21 - ந); "நோவ வுரைத் தாரைத் தாம்பொறுக்க லாகாதார், நாவி னொருவரை வைதால் வயவுரை, பூவிற் பொலிந்தகன்ற கண்ணா யதுவன்றோ, தீயில்லை யூட்டுந் திறம்" (பழ. 45) என்னும் செய்யுளின் கருத்தை ஒப்பு நோக்குக.

59. மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
வைவாய வேட்கை யவாவினைக்—கைவாய்க்

கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும்.

2. வேட்கை - பொருள்களின் மேல் தோன்றும் பற்றுள்ளம். அவா - அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழும் ஆசை; மனத்தால் வருமாசை என்பாருமுளர்.

1-2. ஐவாய வேட்கை - ஐம்புலஆசை; "பொறியெனும் பெயரவைவாய்ப் பொங்கழ லரவின் கண்ணே" (சீவக. 375), "ஐந்தவித்தா னாற்றல்", "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்து", "அடல்வேண்டு மைந்தன் புலத்தை" (குறள், 25, 27, 343) என்புழியுங் காண்க.

3. காத்து - தடுத்து;— "கதங்காத்துக் கற்றடங்கல்", "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்" (குறள், 130, 301) என்புழிப்போல.

60. துன்பமே மீதூரக் கண்டுந் துறவுள்ளா
ரின்பமே காமுறுவ ரேழையா—ரின்ப
மிசைதொறு மற்றத னின்னாமை நோக்கிப்
பசைதல் பரியாதா மேல்.

2. நாலடி. 54 : 2.

4. பசைதல் பரியாது - மேவுதலைக் காதலியார்.

---

## ஏழாம் அதிகாரம், சினமின்மை.

61. மதித்திறப் பாரு மிறக்க * மதியா
மிதித்திறப் பாரு மிறக்க—மிதித்தேறி
யீயுந் தலைமே லிருத்தலா லஃதறிவார்
காயுங் கதமின்மை நன்று.

1. இறப்பார் - அளவுகடப்பவர்.

2. மதித்தல் - வைதல்முதலியன.

4. நாலடி. 67 : 4.

(பி - ம்) * 'மதியார்'

62. திண்டாச் சிறப்பிற்றம் மின்னுயிரைத் தாங்காது
கண்டுழி யெல்லாந் துறப்பவோ—மண்டி
யடிபெயரா தாற்ற விளிவந்த போழ்தின்
முடிகிற்கு முள்ளத் தவர்.

1. “ தண்டுதல் - அமைதல் என்னும் பொருட்டுதல் தண்டாமையென்னும் அதன் மறையால் உணர்க; ‘ தண்டாக்காற் றளரியல் ’, ‘ தண்டா விருப்பினள் ’ எனவரும் ” கலி. 85 - ந.

3 - 4. குறள். 970.

63. காவா தொருவன்றன் வாய்திறந்து சொல்லுஞ்சொ
லோவாதே தன்னைச் சுடுதலா—லோவாதே
யாய்ந்தமைந்த கேள்வி யறிவுடையா ரெஞ்ஞான்றுங்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து.

3. கேள்வி :— “ கற்றறிந்தார் கண்டதடக்கம் ” என்றார் பிறரும்.

4. கருத்துமாறு : நாலடி. 117.

மூ. “ எள்ளிப் பிறருரைக்கு மின்னுச்சொற் றன்னெஞ்சிற், கொள்ளி வைத்தாற்போற் கொடிதெனினு - மெள்ள, அறிவென்னு நீரா லவித்தொழுக லாற்றின், பிறிதெனினும். வேண்டா தவம் ” (அறநெறி. 101), ‘ தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே, நாவினாற் சுட்ட வடு ” , “ தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற், றன்னையே கொல்லுஞ் சினம் ” குறள், 129, 305.

64. நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோ—ரோர்த்ததனை
யுள்ளத்தா னுள்ளி யுரைத்துரா யூர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாங் கீழ்.

1. ‘ நிகர் ’ உவமவுருபாக வந்ததற்கு (நன் - மயிலை. சூ. 366) மேற்கோள்.

1 - 2. “நேர்த்து.........விழுமியோர் : என்புழி வெகுண்டுவேரார் என முன்பின்னாகப் பிறந்தது ” (பிரயோக. சூ. 39), “ கண்டுகொட்டல் : என்பதனை, ‘ வேர்த்து வெகுளார் விழுமியோர்’ என்புழிப்போலக் ‘.காட்டிக் காண்டல் ’ என மாறி வைத்துரைத்துக்கொள்க ” சிவஞானபோதமாபாடியம், சூ. 11.

மூ. நாலடி. 66 : 1 - 2 ; 70 : 3 - 4 ; 72 : 1 - 2 ; “ ஆய்ந்த வறிவின ரல்லாதார் புல்லுரைக்குக், காய்ந்தெதிர் சொல்லுபவோ கற்றறிந்தார் ” “ இறப்பச் சிறியவ ரின்னா செயினும், பிறப்பினான் மாண்டார் வெகுளார் ” பழ. 268, 370 ; நீதிநெறி. 17.

65. இளையா னடக்க மடக்கங் கிளைபொரு
ளில்லான் கொடையே கொடைப்பய—னெல்லா
மொறுக்கு மதுகை யுரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை.

1. "அடக்கம் - உயர்ந்தோர்முன் அடங்கியொழுகும் ஒழுக்கம்; அவை பணிந்தமொழியும் தணிந்தநடையும் தானையடக்கலும் வாய்புதைத்தலுமு தலாயின" தொல். மெய்ப்பாடு. சூ. 12 - பேர்.

1 - 2. இளை பொருள்...... கொடைப்பயன்: "பெருவிறல், கைப் பொருள் யாதொன்று மிலனே நச்சிக், காணிய சென்ற விரவன் மாக்கள், களிற்றொடு நெடுந்தேர் வேண்டினுங் கடல, வுப்பொய் சாகாட் டுமணர் காட்ட, கழிமுறி குன்றத் தற்றே" (புறநா. 313) "பொறுத்த லிறப்பினை யென்று மதனை, மறத்த லதனினு நன்று" குறள். 152.

2. கொடை - உயிரும் உடம்பும் உறுப்புமுதலாகிய எல்லாப்பொருளும் கொடுத்தல்; தொல். மெய்ப்பாடு. சூ. 9 - பேர்.

66. கல்லெறிந் தன்ன கயவர்வா யின்னாச்சொ
லெல்லாருங் காணப் பொறுத்துய்ப்ப—ரொல்லை
யிடுநீற்றாற் பையவிந்த நாகம்போற் றத்தங்
குடிமையான் வாதிக்கப் பட்டு.

1. கயமை - குணங்கள் யாவும் இலராய கீழோரது தன்மை; குறள். 108 - அதி. பரிமேல்.

1 - 2. நாலடி, 64 : 1 - 2 ; 70 : 3 - 4 ; 72 : 1 - 2 ; குறள். 156; 'வாய்' என வேண்டாது கூறினார், கயவர் வாய் எப்பொழுதும் நல்ல சொற்கள் பயின்றறி யாதென அதன் இழிவு விளங்குவதற்கு (குறள். 91, 139, 145-பரிமேல்) என்க.

3. அவிந்த - ஒதுங்கிய.

4. குடிமை - குடிப்பிறப்பிற்குத்தக்கவொழுக்கம்; "குடிப்பிறந்தாரது தன் மையைக் குடிமை என்றாரென்பது; அதனை ஊராண்மையெனவும் சொல் லுப" (தொல். மெய்ப்பாடு. சூ. 25 - பேர்) 'வான்றோய்குடி' நாலடி. 69: 4; பெருங். 1. 35 :226,232; மணி. 14:61.

67. மாற்றாராய் நின்றுதம் மாறேற்பார்க் கேலாமை
யாற்றாமை யென்னா ரறிவுடையா—ராற்றாமை
நேர்த்தின்னா மற்றவர் செய்தக்காற் றாமவரைப்
பேர்த்தின்னா செய்யாமை நன்று.

3-4. நாலடி. 61: 4; "இணரெரி தோய்வன்ன வின்னா செயினும், புணரின் வெகுளாமை நன்று" குறள், 308, 861.

68. நெடுங்கால மோடினு நீசர் வெகுளி
கெடுங்கால மின்றிப் பரக்கு—மடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போற் றானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம்.

2-4. "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேனுங் காத்த லரிது" குறள். 29.

. மு "கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்து ... விற்பிடித்து, நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே, சீரொழுகு சான்றோர் சினம்" மூதுரை. 23.

69. உபகாரஞ் செய்ததனை யோராதே தங்க
ணபகார மாற்றச் செயினு—முபகாரந்
தாஞ்செய்வ தல்லாற் றவற்றினாற் றீங்கூக்கல்
வான்றோய் குடிப்பிறந் தார்க் கில்.

3. ஊக்கல் - முயன்றுசெய்தல்.

4. "வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது" நாலடி. 66;142 : 2; "வானுயர்தோற்றமென்பது; 'வான்றோய்குடி' என்றாற்போல இலக்கணைவழக்கு" குறள். 272 - பரிமேல்.

மு. "இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண, நன்னயஞ் செய்து விடல்", "இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கா, லென்ன பயத்ததோ சால்பு" குறள். 314, 316.

70. கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
பேர்த்துநாய் கௌவினா ரீங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மக்கள் டம்வாயான் மீட்டு.

1. கூர்த்து - சினமிக்கு. 'வாயால்' எனவேண்டாது கூறினார்; (அவர்கள் வாய்) நல்ல சொற்களையே பயின்றதெனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு" குறள். 91, 139, 415.

2. பேர்த்து - பெயர்த்து; பெருங். 1. 32 : 52.

3-4. நாலடி. 64 : 1 - 2; 66 : 1 - 2; 72 : 1 - 2; "ஆய்ந்த வறிவின ரல்லாதார் புல்லுரைக்குக், காய்ந்தெதிர் சொல்லுபவோ கற்றறிந்தார்" பழ. 268.

மு. "நீர்த்தக வில்லார் நிரம்பாமைத் தந்வலியின், கூர்த்தவரைத் தாநலிதல் கோளன்றால் சான்றோர்க்குப், பார்த்தோடிச் சென்று கதம்பட்டு நாய்கவ்விற், பேர்த்துநாய் கவ்வினா ரில்" பழ. 375.

முதலாவது,

துறவறவியல் முற்றிற்று.

## இரண்டாவது, இல்லறவியல்.

## முதலாவது, பொறையுடைமை.

71. கோதை யருவிக் குளிர்வரை நன்னாட
பேதையொ டியாது முரையற்க—பேதை
யுரைப்பிற் சிதைந்துரைக்கு மொல்லும் வகையான்
வழுக்கிக் கழிதலே நன்று.

1. "இலங்கு நீண்முடி யிந்திரன் மார்பின்மேல், விலங்கி வீழ்ந்தமுத் தார மும் போன்றவை", "கோதை யருவிக் குளிர்வரை மேனின்று", "விலங்கு மாலை வெள்ளருவிய வெழில்வரை" (சீவக. 35,525, 2378) கோதை என்பதற்கு 'ஒழுங்கு' எனப் பொருள்கூறி, 'கோதை யருவி' என்பதை மேற்கோள் காட்டுவர் **அடியார்க்குநல்லார்**; சிலப். 5 : 191—5.

3. சிதைந்துரைக்கும் - கெடச்சொல்லுவான். ஒல்லும்வகையான் - தத்தமக் கியலுந் திறத்தான்; குறள். 33.

2-3. "கல்லா தவரிடைக் கட்டுரையி னல்லதோர், பொல்லாத தில்லை யொருவற்கு" (பழ. 64), "வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்" சிலப்.30: பதி.

2 - 4. ஆருச் சினத்த னறிவிலன் மற்றவனை, மாறியொழுக றலை யென்ப—வேறி, வளியாற் றிரையுலாம் வாங்குநீர்ச் சேர்ப்ப, தெளியானைத் தேற லரிது" (பழ. 385), "நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப், பண்பில் சொற்பல்லா ரகத்து", "புல்லவையுள் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு, ணன்கு செலச்சொல்லு வார்" குறள். 194,719, 729.

72. நேரல்லார் நீரல்ல சொல்லியக்கான் மற்றது
தாரித் திருத்த றகுதிமற்—றோரும்
புகழ்மையாக் கொள்ளாது பொங்குநீர் ஞாலஞ்
சமழ்மையாக் கொண்டு விடும்.

1. நீரல்ல - நற்குணமுடையவாகாத ; நாலடி. 64.

2. ஓரும், அசை ; "அஞ்சுவதோருமறனே" (குறள். 366) என்புழிப் போல.

1 - 2. தாரித்து- பொறுத்து; நாலடி. 58, 64 : 1 - 2 ; 66 : 1 - 2 ; 70 : 3 - 4 ; "தெரியா தவர்தந் திறனில்சொற் கேட்டாற், பரியாதார் போல விருக்க" (பழ. 135), "சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம், பெரியோ ராயிற் பொறுப் பது கடனே" வெற்றிவேற்கை.

4. சமழ்மை - தாழ்வு ; வருத்தமென்றும், நாணமென்றும் கூறிய..

மூ. எதிர்மறையெச்சத்திற்கு (நன் - மயிலை. சூ. 359) மேற்கோள்.

**73.** காதலார் சொல்லுங் கடுஞ்சொல் லுவந்துரைக்கு
மேதிலா ரின்சொலிற் றீதாமோ—போதெலா
மாதர்வண் டார்க்கு மலிகடற் றண்சேர்ப்ப
வாவ தறிவார்ப் பெறின்.

1 - 2. இன்சொலின் - இதமானவற்றைக்காட்டில் ; நாலடி. 222, 225 ; "அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய, வல்லார்நட் பாய்ந்து கொளல்" (குறள், 795), "உளையவுரைத்து விடினு முறுதி, கிளைகள்வாய்க் கேட்பது நன்றே" (பழ. 299), "இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார் கனியு மொழியுங் கடுவே" (நீதிநெறி. 59), "மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர், பேசுற்ற வின்சொற் பிறிதென்க" (நன்னெறி. 2), "அழ அழச் சொல்லுவார் தமர், சிரிக்கச் சிரிக்கச் சொல்லுவார் பிறர்" என்னும் பழமொழியும் ஈண்டுக் கவனிக்கத்தக்கது.

**74.** அறிவ தறிந் ‡ தடங்கி யஞ்சுவ தஞ்சி
யுறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனா
லின்புற்று வாழு மியல்புடையா ரெஞ்ஞான்றுந்
துன்புற்று வாழ்த லரிது.

1. அஞ்சுவதஞ்சல் : "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ தஞ்ச, லறிவார் தொழில்" குறள். 428.

2. உறுவது - உறுதி. உலகுவப்ப - ஒப்புரவார் மகிழுமொப்புரவுகளை.

2 - 3. பெறுவதனால்......... இயல்பு : "போதுமென்ற மனமே பொன் செய்யு மருந்து" பழமொழி.

4. அரிது, இன்மை குறித்துநின்றது.

மூ. "அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை, யாரிரு ளுய்த்து விடும்", 'உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங், கல்லா ரறிவிலா தார்", "அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா, ரஃதறி கல்லா தவர்", "அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா, ரென்னுடைய ரேனு மிலர்" (குறள், 121, 140, 427, 430) "கற்றறிவார் கண்ட தடக்கம்"

(பி - ம்) ‡ 'அடக்கி'

**75.** வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்காற்
றேற்றா வொழுக்க மொருவன்க ணுண்டாயி
னாற்றுந் துணையும் பொறுக்க பொறானாயிற்
றூற்றாதே தூர விடல்.

2. "தேற்றகில்லேமென்பது, 'தேற்றாப் புன்சொ னோற்றிசின்' (புறம்.202) என்பதுபோலத் தெளிதற்கண் வந்தது" (திருச்சிற். 45-பேர்), 'காட்டியவென்

பது தன்வினைப்பொருள்படநின்றது ...... தேற்றுவொழுக்கம்...... என் புழிப்போல" (சிவஞானபோதமாபாடியம், சூ. 9, அதிகாணம்,). "தேற்று வொழுக்க மொருவன்க ணுண்டாயின்......இவை சொல்லொன்றே தன்வினை யும் பிறவினையும் ஆயின" (இ - கொ. சூ. 67 ; நன் - வி. சூ. 322), "தேற்றாய் பெருமநீ பொய்யே" (புறம். 59), "சிலசொல்ல றேற்றா தவர்" (குறள், 649), "வாளினுற் பேச லல்லால் வாயினுற் பேச றேற்றேன்", "வாணிக மொன்றுந் தேற்றாய்" சீவக. 257, 770.

4. "உளவே : என்னும் ஏகாரம் எதிர்மறை ...... 'தூற்றாதே தூர விடல்' என்றது, 'தூற்றும்' என்று பொருள்பட்டவாறு போல என்றறிக" (திருச் சிற். 110-பேர்), "தூற்றாதே தூரவிடல் : தூற்றும் என்னும் பொருள்பட்டமை யான் எதிர்மறையேகாரம்" நேமி. சூ. 52.

மூ. நாலடி. 221, 227, 229; "ஆண்டீண் டெனவொன்றோ வேண்டா வடைந்தாரை, மாண்டிலா ரென்றே மறைப்பக் கிடந்ததோ ... ... பூண்ட, பறை யறையா ராயினு ரில்" பழ. 112; குறள். 807.

76. இன்னா செயினு மினிய வொழிகென்று
தன்னையே தானோவி னல்லது—துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ள லரிது.

1. இனியவொழிகென்று : நாலடி. 306.

3-4. "விள்ளல்-சொல்லல்; 'கைவிடுதல் விள்ள லரிது', 'கலந்தாரைக் கைவிடு தல்'... எனக், கையென்பது உபசர்க்கமாய் ... வினைச்சொல்லோடும் வந்தது" பிரயோக. சூ. 45 ; நாலடி. 220, 223, 246, "விலங்கேயுந் தம்மோ டுடனுறைதன் மேவுங், கலந்தாரைக் கைவிடுத லொல்லா ... இன்னாதே, பேஎயொ டானும் பிரிவு" (பழ. 122), "பிரிவு செய்தா லரிதே கொள்க பேயொடு மென்னும் பெற்றி" (திருச்சிற். 144), "பேயோ டேனும் பிரிவொன்றின்னா தென்பர் பிறரெல்லாம்" (திருப் பாட்டு. சுந்தரர். ஆரூர்), "தெரியக், கண்ணிற் காணா ராயினுங் கனவி, னண் ணுங் காலை நல்லுயிர் செருக்கும், பேயே யாயினும் பிரியி னின்பம், வாயா தென்று மதியோ ரறைப, மாஇ நாலூநின் னன்றி யாரு, மறிய வார பெரும" (ஞானமிர்தம், 46), "மருவியவப், பேயின்றிறத்துப் பிரித லின்னா வென்று பேசுவரே" (அம்பிகாபதி. 517), "பேயோடு பழகுறினும் பிரிவதரி தரிதென்று தாயோரு மொழிவரால்" (குசேலோபாக்கியானம்), 'கூடிப்பிரியேல்' ஆத்திசூடி.

மூ. ஒழியிசையெச்சத்திற்கு (நன் - மயிலை. சூ. 359) மேற்கோள்.

77. பெரியார் பெருநட்புக் கோடறுஞ் செய்த
வரிய பொறுப்பவென் றன்றோ—வரியரோ

வொல்லெ னருவி யுயர்வரை நன்னாட
நல்ல செய்வார்க்குத் தமர்.

மூ. கம்ப. 110 : 80.

3. உயர்வரை, வினைத்தொகை. 'உயர்' என்பது வினைப்பகுதியாதலாலும் காலந்தோன்றிநிற்றலாலும் பண்புத்தொகை எனல் பொருந்தாது ; தொல். கிளவி. ந.

78. வற்றிமற் றற்றப் பசிப்பினும் பண்பிலார்க்
கற்ற மறிய வுரையற்க—வற்ற
மறைக்குந் துணையார்க் குரைப்பவே தம்மைத்
துறக்குந் துணிவிலா தார்.

1. "வற்றிமற் றற்றப் பசிப்பினும்": (நாலடி. 285, 292; குறள். 1014, 1043, 1046, 1051-7), "புனிற்று நாய் குரைக்கும் புல்லெ னட்டில், காழ்சோர் முதுசுவர்க் கணச்சித லரித்த, பூழி பூத்த புழற்கா ளாம்பி, யொல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருங்குல், வளைக்கைக் கிணை மகள் வள்ளுகிர்க் குறைத்த, குப்பைவேளை யுப்புலி வெந்ததை, மடவோர் காட்சி நாணிக் கடையடைத், திரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசைய, மழிபசி வருத்தம்" (சிறுபாண். 132 - 40), "ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பி, னாம்பி பூப்பத் தேம்புபசி யுழவா" (புறம். 164), "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும், பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉ, நாணணி களையு மாணெழில் சிதைக்கும், பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும், பசிப் பிணி யென்னும் பாவி" (மணி. 11 : 76 - 80), "மானம் குலம் கல்வி ... ... காமுறுதல் பத்தும் பசிவந்திடப் பறந்துபோம்" (நல்வழி). பண்பு - இனி மையும் மெய்ம்மையு முதலாயசொற்குணங்கள் (குறள். 643 - பரிமேல்), "பண்பெனப்படுவது பாடறிந் தொழுகல்" கலி. 124.

2. அற்றம் - எல்லாப்பொருள்களும் அறுதல் ; ஆவது வறுமை.

3. மறைதல் - நீக்குதல் ; "தம்வயிற் குற்றம் மறையாவழி" (குறள்) என்புழியும் காண்க. வெளிப்படாதெழுதல் எனினுமாம்.

மூ. நாலடி. 292 ; "தெற்றப் பரிந்தொருவர் தீர்ப்ப ரெனப்பட்டார்க், குற்ற முறையை யுரைப்பதாந் - தெற்ற, வரையா ரணிவளையாய் தீர்த லுறுவார், மறையார் மருத்துவர்க்கு நோய்" (பழ. 88), 'தோழனோடு மேழைமை பேசேல்'

79. இன்பம் பயந்தாங் கிழிவு தலைவரினு
மின்பத்தின் பக்க மிருந்தைக்க—வின்ப
மொழியாமை கண்டாலு மோங்கருவி நாட
பழியாகா வாறே தலை.

2. இருந்தைக்க - ஒழிக ; " கடிநிலை யின்றே யாசிரி யற்க " (தொல்). என்புழிப்போல.

80. தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க தன்னுடம்பி
னூன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க—†வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல்.

1 - 2. தன்னுடம்பின்......உண்ணற்க : நாலடி. 206.

2 - 3. வான் கவிந்த வையகம் : " வானஞ் சூடிய, மலர்தலை யுலகத்துள் ளும் " (பெரும்பாண். 409 - 10), " வானஞ் சூடிய, மண்டிணி கிடக்கை " புறம். 35.

3 - 4. " உயர்நிலை யுலக மமிழ்தொடு பெறினும், பொய்சே ணீங்கிய வாய் நட் பினையே " (மதுரை. 197 - 8), " நம்மோ ரன்னோர் மாட்டு மின்ன, பொய் யொடு மிடைந்தவை தோன்றின், மெய்யாண் டுளதோவிவ் வுலகத் தானே " அகம். 286.

ஒ. அரிச்சந்திரசரிதையை நோக்குக.

(பி - ம்) † 'வான் கவித்த'

---

## இரண்டாம் அதிகாரம், பிறர்மனைநயவாமை *

81. அச்சம் பெரிதா லதற்கின்பஞ் சிற்றளவா
னிச்ச நினையுங்காற் கோக்கொலையா—னிச்சலுங்
கும்பிக்கே கூர்த்த வினையாற்‡ பிறன்றா
ரம்பற்க நாணுடை யார்.

* குறள், 15 - அதிகாரம்.

3. கூர்த்த - மிகுந்த ; ஞானாமிர்தம், 44.

ஒ. " பிறன் பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத், தறம் பொருள் கண்டார்க ணில் " (குறள். 141), " தங்கிருட் போதில் தலைச்சென் றயன்மனை, யுங்கு மகிழ்ந்தா ளவளிவள் காணெனச், செங்கன லேயென வெம்பிய செம்பினிற், பொங்கனற் பாவைகள் புல்லப் புணர்ப்பார் " (சூளா. துறவு. 9), " காதலாள் கரிந்து நையைக் கடியவே கனிந்து கன்றி, யேதிலான் றாரநம்பி யெளி தென விறந்த பாவத், தூதுலை யுருகவெந்த வொள்ளழற் செப்புப் பாவை, யாதகா தென்னப் புல்லி யலறுமால் யானை வேந்தே " (சீவக. 2769), " வம்புலாங் கூந் தன் மனைவியைத் துறந்து பிறர்பொரு டாரமென் றிவற்றை, நம்பினா ரிறந்தா னமன்றமர் பற்றி யெற்றிவைத் தெரியெழுகின்ற, செம்பினா லியன்ற பாவை யைப் பாவீ தழுவென மொழிவதற் கஞ்சி, நம்பனே வந்துடன் றிருவடி யடைந் தேன் " பெரிய திருமொழி, 1. 6. 4.

(பி - ம்) ‡ 'பிறர் தாரம்'

82. §அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றார நச்சுவார்ச் சேரா—பிறன்றார
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்.

1 - 2. " அறனு மறனறிந்த செய்கையுஞ் சான்றோர், திறனுடைய னென்றுரைக்குந் தேசும் - பிறனில், பிழைத்தா னெனப்பிறராற் பேசப் படுமே, விழுக்கா மொருங்கே யிவை " அறநெறி. 149.

அறம் புகழ் கேண்மை பெருமை என்பனவற்றை, பாவம் பழி பகை அச்சமென்பவற்றோடு கூட்டுக.

2-4. பிறன்றாரம்......பொருள்: " பகை பாவ மச்சம் பழியென நான்கு, மிகவாவா மில்லிறப்பான் கண் " (குறள். 146), " எவ்வினைய ரேனு மினை விழைச்சொன் றிலரெனிற், றெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉ-மவ்வினை,காத்திலரே லெனைத்துணைய ராயினுந், தூர்த்தருந் தூர்ப்பா ரலர் " நீதிநெறி. 89.

மூ. கருமமுங் கருத்தாவும் தானேயாய் நிற்றலிற் கருமகருத்தாவாயிற்றென்பர் பெருந்தேவனார் ; வீர. உபகாரப். சூ. 41.

(பி - ம்) § ' அறம் பொருள் '

83. புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சந்
துய்க்குமிடத் தச்சந் தோன்றாமற் காப்பச்ச
மெக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ
வுட்கான் பிறனில் புகல்.

3. எவன் கொல் - எவ்வண்ணமோ ; ஞானமிர்தம், 44, 46.

4. உட்கான் பிறனில் புகல்: " தினைத்துணையுந் தேரான் பிறனில் புகல் " (குறள். 144) என்புழிப்போல.

84. காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால்குறையு
*மாணின்மை செய்யுங்கா லச்சமா—நீணிரயத்
துன்பம் பயக்குமாற் றுச்சாரி †நீகண்ட
வின்ப மெனக்கெனைத்தாற் கூறு.

2. ஆணின்மை - (உயர்ந்த) மனிதனுக்குரிய குணமாகாத அத்தீய ஒழுக்கத்தை ; " பிறன்மனை நோக்காத பேராண்மை " (குறள். 148) என்பதன் உரையில், " புறப்பகைகளை யடக்கும் ஆண்மையுடையார்க்கும் உட்பகையாகிய காமம் அடக்குதற்கு அருமையின், அதனையடக்கிய ஆண்மையைப் 'பேராண்மை' என்றார் " எனப் பரிமேலழகர் கூறுவதுங்காண்க. நிரயத்துன்பம் - நரக வேதனையைச் செய்யுந் துன்பம் ; (நாலடி. 85 : 4), " நிரயத்துத் துஞ்

சாத் துயரந் தரும்" (அறநெறி. 65), "நிரயத்தானை - மாற்றார்க்கு நரகவேதனையைச் செய்யுந் தானை" (சிலப். 30 : 25) என அரும்பதவுரையாசிரியர் கூறுவதும் காண்க.

3. துச்சாரி - துராசாரமுடையோய்.

(பி - ம்) * 'மாணின்மை செய்யுமா மச்சமாம்' † 'நீ கொண்ட'

85. செம்மையொன் றின்றிச் சிறியா ரினத்தராய்க்
கொம்மை வரிமுலையா டோண்மரீஇ—யும்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்றாரே யிம்மை
யலியாகி யாடியுண் பார்.

1. செம்மை - நடுவுநிலைமை. "சிறியவினமாவது - நல்லதனலனும் தீயதன் றீமையும் இல்லென்போரும் விடரும் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட குழு" (குறள். 46 - அதி. பரிமேல்), "வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு, குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப், பொச்சாப் புண்டு பொருளுரை யாளர், நச்சுக்கொன் றேற்கு" சிலப். 16 : 63 - 6.

2. கொம்மை - திரட்சி (ஞானமிர்தம், 33, 35), பெருமை (சீவக. 347); இளமையெனினுமாம்; "கொம்மை வருமுலை" (நெடுநல். 69; சிலப். 28 : 16.) உம்மை - முற்பிறப்பு; சிலப். 15 : 92 - அடியார்.

3. பிறர்மனை மேற்சென்றார்: "பிறன் கடை, நின்றாரிற் பேதையா ரில்" (குறள். 142) என்புழிப்போல.

86. பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக்
கல்யாணஞ் செய்து கடிபுக்க—மெல்லியற்
காதன் மனையாளு மில்லாளா வென்னொருவ
னேதின் மனையாளை நோக்கு.

1 - 2. "பல்லாரறிய...... கல்யாணஞ் செய்து: "நாடறி நன்மண மயர்கம்" (குறிஞ்சி. 232), "பலரறி மணமவர் படுகுவர்" சிலப். 24. "மலைமகள்"

2. கடி: நாலடி. 56 : 4.

4. நோக்கு: "பிறன்மனை நோக்காத பேராண்மை" (குறள். 148) என்பதற்கு "பிறன் மனையாளை உட்கொள்ளாத பெரிய ஆண்டகைமை" எனப் பரிமேலழகர் கூறியிருத்தலும் காண்க.

மு. "அறனிற் கொண்ட தன்மனையா ளமளித் தலத்தி லழுதிரங்கப், பிறனிற் றேடும் பெரும் பாவி" (பாரதம்) என்றதுங் காண்க.

87. அம்ப லயலெடுப்ப வஞ்சித் தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇ மைந்துற்று—நம்பு

நிலைமையி னெஞ்சத்தான் றுப்புரவு பாம்பின்
றலைநக்கி யன்ன துடைத்து.

1. அம்பல் - சொல் நிகழாதே முகிழ்த்துச்சொல்லுதல் ; தொல். களவு. சூ. 48 - ந; இறை. சூ. 22.

2. வம்பலன் - அயலான். பெண் - மனைவி.

88. பரவா *வெளிப்படா பல்லோர்கட் டங்கா
வுரவோர்கட் காமநோ யோஒ கொடிதே
விரவாரு ளுணுப் படலஞ்சி யாது
முரையாதுள் ளாறி விடும்.

2. உரவோர் - அறிவினையுடையோர். ஓஒ ! கொடிதே : "ஓஒ பாவம்" (சீவக. 1551) என்புழிப்போல.

(பி - ம்) * 'வெளிப்படார் பல்லோர்கட்டங்கார்'

89. அம்பு மழலு மவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்—வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலாற் காம
மவற்றினு மஞ்சப் படும்.

மு. நாலடி. 90 ; "நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந், தீயாண்டுப் பெற்றா ளிவள்", "மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே, னுள்ளினு முள்ளஞ் சுடும்" (குறள். 1104, 1207), "மேவுதற் கரிதாய்க் கேசம் புகையதாய் விழிக்கு நன்றாய்த், தீவினைச் சிகைசேர் மாத ரொனுங்கன றிருணம் போல, யாவரைச் சுடாது தூரத் தெரிகின்ற நரகத் தீக்குப், பாவையர் குளிர்ந்த மேனி பசையிலா விறக தாமே" (ஞானவாசிட்டம்.) மகளிர் சுகம் இடராய் விளையுமென்பதற்கு (அவிரோதவுந்தியார், 89) மேற்கோள்.

90. உளரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகு—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
யொளிப்பினுங் காமஞ் சுடும்.

1. உருகெழு - அச்சம்பொருந்திய.

4. சுடும் - சுடவற்று.

மு. "நெடுஞ்சுடர்த், தீயினுற் சுடுதலோ விலர்ம ஞயிழை, தீயினுங் கடிதவர் சாயலிற் கனலுநோய்", "ஊர்தலைக்கொண்டு கனலுங் கடுந்தீயு, ணீர்பெய்தக் காலே சினந்தணியு மற்றிஃதோ, ஈரமில் கள்வ னுறீஇய காமத்தீ, நீருட் புகினுஞ்

சுடும் " (கலி. 137, 144),,, காலத்தால் வருவ தொன்றோ காமத்தாற் கனலும் வெந்தீச், சீலத்தா லழிவதன்றிச் செய்யத்தா னவதுண்டோ " (இராமாவதாரம்), மகளிர் இன்பம் இடராய் விளையுமென்பதற்கு (அவிரோதவுந்தியார், 89) மேற்கோள்.

---

## மூன்றும் அதிகாரம், ஈகை

**91.** இல்லா விடத்து மியைந்த வளவினா
னுள்ள விடம்போற் பெரிதுவந்து—மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்
கடையாவா மாண்டைக் கதவு.

2. நாலடி. 98.

1-3. நாலடி. 94: 1-2 ; 95. 1-2.

மு. நாலடி. 112, 141, 150, 153, 212, 271, 272, 300, 343 ; " இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார், கடனறி காட்சி யவர் " (குறள். 218, 224), "ஒன்றாக நல்ல துயிரோம்ப லாங்கதன் பின், னன்றாய்ந் தடங்கினார்க் கீத்துண்ட லென்றிரண்டு, குன்றாப் புகழோன் வருகென்று மேலுலக, நின்றது வாயி றிறந்து " அறநெறி. 62 ; சீவக. 13 : 225, 244.

**92.** முன்னரே சாநாண் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கு நோயுள—கொன்னே
பரவன்மின் பற்றன்மின் பாத்துண்மின் யாதுங்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து.

2. கொன்னே - பயனில்லாதவற்றை; (நாலடி. 19) விகற்பமற எனலுமாம் ; ஞானமிர்தம், 6.

1 - 2. நாலடி. 55. 1 - 2 ; " முன்னரே......நோயுள : எனவும் பிறவும் ' முன்னர் ', ' பின்னர் ' என்பன இடமுணர்த்தியே நிற்குமென்றுணர்க " மதுரை. 40 - 42. ந.

3: பாத்துண்மின் - " பசியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் " (குறள். 44) என்பதற்கு, " அப்பொருளை இயல்புடைய மூவர் முதலாயினார்க்கும் தென்புலத்தார்முதலிய நால்வர்க்கும் பகுத்துத் தானுண்டல் " எனப் பொருள் கூறுவர் பரிமேலழகர்; " பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர், தொகுத்தவற்று ளெல்லாந் தலை " ஷை. 322.

4. கரவன்மின் - கரந்து செய்யன்மின் ; " கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ் செய்ம்மின் " நாலடி. 19.

3 - 4. நாலடி. 271 : 3 - 4 ; 272 : 3 - 4.

93. நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்†தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக்கால்.

3. மிடுக்கு - வலி.

4. உலந்தக்கால் - கெட்ட இடத்து.

ழ. அடிமறிமாற்றுப்பொருள்கோளுக்கு (நன் - மயிலை. சூ. 418'; நன் - வி. சூ. 419) மேற்கோள். குறள். 371, 376.

(பி - ம்) † 'தற்றுய்ப்பினும்'

94. இம்மி யரிசித் துணையானும் வைகலு
நும்மி லியைவ கொடுத்துண்மி—னும்மைக்
கொடாஅ தவரென்பர் குண்டுநீர் வையத்
தடாஅ வடுப்பி னவர்.

1. இம்மியரிசி - மத்தங்காய்ப்புல்லரிசி; "இம்மியன நுண்பொருள்கள்" (சீவக. 495) என்புழியும் காண்க.

95. மறுமையு மிம்மையு நோக்கி யொருவற்
குறுமா றியைவ கொடுத்தல்—வறுமையா
லீத லிசையா தெனினு மிரவாமை
யீத லிரட்டி யுறும்.

1 - 2. நாலடி. 95 : 1 - 2; 271 : 1 - 2; 272 : 1 - 2; "இயைவது கரத்தலிற் கொடுமை யில்லை" (முதுமொழிக்காஞ்சி. 55), "இயல்வதுகரவேல்" "ஐயமிட்டுண்" ஆத்திசூடி.

2. உறுமாறு.

3. ஈதல் இசையாதெனினும் : "ஈகையரிதெனினும்" (நீதிநெறி ); இசையாதெனினும் : நாலடி. 152, 193.

3 - 4. "வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோ, னல்குரவே போலு நனிநல்ல—கொன்னே, யருளில னன்பிலன் கண்ணறைய னென்று, பலரா லிகழப் படான்" (நீதிநெறி. 67), "காயா மரமும் வறளாங் குளமுங் கல்லாவு மென்ன, வீயா மனிதரை யேன்படைத் தாய்கச்சி யேகம்பனே" (பட்டினத்தார்), "நல்லது செய்த லாற்றீ ராயினு, மல்லது செய்த லோம்புமின்" (புறம். 195), "கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு, மிரவாமை கோடி யுறும்" (குறள். 1061), "மொழிந்தவை, மென்மொழியா லுண்ணெகிழ்ந் தீவாரேனல் விண்ணோரா, லின்மொழியா லேத்தப் படும்" சிறுபஞ்ச 81.

96. நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க
படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்
குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணா மாக்கள்
§ சுடுகாட்டு ளேற்றைப் பனை.

1. வேதிகைச் சுற்று - வேதிகை வட்டத்தையுடைய; கோட்புக்க - குலையோடு கூடிய. "பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ, நயனுடை யான்கட் படின்" (குறள். 216), "உதவுமாடியர், பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவும்" (இராமாவ. அயோத்தி. மந்திரப் 82), "கற்றையஞ் சுடர்மணி கனக மேனைய, பிற்றையென் றதருள் பெரியவர் வண்மைபோன், மற்றவ னுள்ளபன் மாமரந் தம்பய, னெற்றையு முலப்புறா தீகை சான்றவே" (கந்தபுராணம்......) என்பவற்றை ஒப்பிடுக.

4. "எல்லாமென்றதனாற் சிறுபான்மை ஆற்றலில்லாதனவுங் கொள்க; அது 'சுடுகாட்டுளேற்றைப்பனை' என்பதுபோன்று வருவன" தொல். மரபு. சூ. 49 - பேர்.

மூ. "நச்சப் படாதவன் செல்வ நடுவூரு, ணச்சு மரம்பழுத் தற்று" குறள். 1008.

(பி - ம்) § 'இடுகாட்டுளேற்றுப்பனை'

97. பெயற்பான் மழைபெய்யாக் கண்ணு முலகஞ்
செயற்பால செய்யா விடினுங்—† கயற்புலால்
புன்னை கடியும் பொருகடற் றண்சேர்ப்ப
வென்னை யுலகுய்யு மாறு

1. மழை:— "கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்......எல்லாவுயிர்க்கு மில்லால் வாழ்க்கை" (புறம். 203), "மழையின்றி மாநிலத்தார்க் கில்லை" (நான்மணி. 48), "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" குறள். 211.

2-3. கயற்புலால்.........சேர்ப்ப: உயிரில்பொருட்குணத்திற்கு (நன் - மயிலை. சூ. 453) மேற்கோள்.

(பி - ம்) † 'கயப்புலால்'

98. ஏற்றகை மாற்றாமை யென்னானுந் §தாம்வரையா
தாற்றாதார்க் கீவதா மாண்கட—னாற்றின்
மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல்
பொலிகட னென்னும் பெயர்த்து.

(பி - ம்) § 'தம்வரையான்', 'தாம் வரையார்'.

2. ஆற்றாதார் - ஒன்றும் செய்ய முடியாதவர்; வறிஞர்; "ஆற்றாமாக்க ளரும்பசி களைவோர்", "ஆற்றா மக்கட் காற்றுந்துணை யாகி" மணி. 11: 93; 17: 64; 19: 35.

1-2. "அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம், பெற்றா டமியண் மூத் தற்று" (குறள். 1007), "எற்றார்கட் கெல்லா மிசைநிற்பத் தாமுடைய, மாற்றார் கொடுத்திருப்ப வள்ளண்மை" (பழ. 318), "வாயாலில்லை யென்பதைக் கையாலில்லை யெனல்" பழமொழி.

3 - 4. "சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கா லதனைப், பெறுநன்றி மன்னும் பெரிதென் - றுறுநன்றி, தானவாய்ச் செய்வதூஉந் தானமன் றென் பவே, வானவா முள்ளத் தவர்" யா - வி. எழுத். சூ. 4.

மு. "வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங், குறியெதிர்ப்பை நீர துடைத்து" (குறள். 221), "ஆற்றுநர்க் களிப்போ ரறவிலை பகர்வோ, ராற்றா மாக்க ளரும்பசி களைவோர், மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை" (மணி. 11: 93-5), "மாண்புடையாளர் கேண்மையர் தத்தம் வழிமுறை யொழுக்கினி லமர்ந்தோர், சேண்படு நிரப்பி னெய்தினோர் புரப்போர்த் தீர்ந்தவர் தந்தை தாய் குரவர், காண்டகு முதவி புரிந்துளோ ரினையோ ரொன்பதின் மருமுளங் களிப்ப, வேண்டுறு நிதிய மளிப்பின்மற் றென்றே கோடியா மெனமறை விளம்பும்" காசிகண்டம்.

99. இறப்பச் சிறிதென்னா தில்லெனா தென்று
மறப்பயன் யார்மாட்டுஞ் செய்க—முறைப்புதவி
னையம் புகூஉந் தவசி கடிஞைபோற்
பைய நிறைத்து விடும்.

1. நாலடி. 38.

2. அறப்பயன் - ஈகை. புதவு - வாயில்; மதுரை. 65.

3. கடிஞை - பிச்சைப்பாத்திரம்; சிலப். 10: 98; மணி. 13: 103.

மு. 'பலதுளி பெருவெள்ளம்' என்பது பழமொழி.

100. †கடிப்பிகு கண்முரசங் காதத்தோர் கேட்ப
ரிடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்ப
ரடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தா ரெனப்படுஞ் சொல்.

1. கடிப்பு - அடிக்குங்குறுந்தடி. கண் - அடிக்குமிடமாகிய வாத்தியத் தினடு. கடிப்பிகுகண் முரசம்: "கடிப்பிகு முரசின் முழங்கு" (குறுந். 270), "முரசுகடிப் பிகுப்பவும்" (புறம். 158), "நாக்கடிப்பாக வாய்ப்பறை யறை யினும்" (சிலப். 14: 29; மணி. 25: 51), "தொடித்தோட் டென்னவன் கடிப்

பிகு முரசே" (சிலப். 17 'என்றியாம்'), "கண்முரசியம்பி" (மணி. 1 : 69), "முரசுகடிப் பிகுத்த மூரிமுற்றத்து" பெருங். 1. 37. 5. காதம் - ஏழரைநாழி கைவழி.

2. "நாலடியாருள்,......யோசனையோர் கேட்பர்......எனத் தற்சமமாகக் கூறினாற்போல, யாமும் உருவபேதமென்னுமலே ரூபபேதமென்றும்" (பிர யோக. சூ. 37 - உரை.) யோசனை - நாற்காத வெல்லை; சீவக. 1901-ந.

மு. குறள். 233, 234.

(பி - ம்) † 'கடிப்பிடு'

## நான்காம் அத்காரம், பழவினை.

101\. † பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.

1. குழக்கன்று : தோல் உரி. சூ. 15 - சே ; நன் - மயிலை. சூ. 270; நற். 359: 3. உய்த்துவிடின், ஒருசொல் ; குறள். 121.

2 - 3. தொல்லைப் பழவினை - முற்பிறப்பிற்செய்த கருமம்.

மு. "முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்", "பெற்றி கருமம் பிழை யாமற் செய்குநின், பற்றின்க ணில்லா தறஞ்செய்க - மற்றது, பொன்றுப் புகழ் நிறுத்திப் போய்ப்பிறந்த வூர்நாடிக், கன்றுடைத் தாய்போல் வரும்" (அற நெறி. 60, 95), "முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார், பிற்பெரிய செல் வம் பெறலாமோ - வைப்போ, டிகலிப் பொருள்செய்ய வெண்ணியக்கா லென்னு, முதலிலார்க் கூதிய மில்" (பழ. 312), "பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச், சொரியினும் போகா தம" குறள். 376.

(பி - ம்) † 'பல்லாவொளித்துவிடினும்'

102\. உருவு மிளமையு மொண்பொருளு முட்கு
மொருவழி நில்லாமை கண்டு—மொருவழியே
யொன்றேயு மில்லாதான் வாழ்க்கை யுடம்பிட்டு
நின்றுவீழ்ந் தக்க துடைத்து.

1. உரு - கண்டார் விரும்புந் தோற்றப்பொலிவு (குறள். 684) உட்கும் - (பலரும்) கூசத்தக்க மதிப்பும்.

மு. "இளமையுங் காமமு நின்பாணி நில்லா......உறைநாள் கழிதலுருமைக் காண்டை, கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லை.....வேற்றுமை கொண்டு பொருள்வயிற் போகுவாய், கூற்றமு மூப்பு மறந்தாரோடு", "கூற்றம்போற் றுறைபசிஉட் கொடுகாளு க்கேயுமினா", "இளமையுங் காமமு மொராங்கு பெற்றா,

வளமை விழைதக்க துண்டோ வுளநாள் ", " யாறுநீர் கழிந்தன்ன விளமை " (கலி 12, 17, 18, 20), "இளமையு மெழிலும் வானத் திருவில்லி னீண்டை மாயும்" (மேருமந்தரம். 109), "இளமையு நிலையாவா லின்பமு நின்ற வல்ல, வளமையு மஃதேயால் வைகலுந் துன்ப வெள்ள, முளவென நினையாதே செல்கதிக் கென்று மொன்று, விளைநில னுழுவார்போல வித்துநீர் செய்து கொண்மின்" வளையாபதி ; நாலடி. 120.

103. வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
யளந்தன போக மவரவ ராற்றான்
விளங்காய் திரட்டினா ரில்லை—களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்.

1. "வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை : என்னுமுறையானே முடவன் மலையிற்றேனை அவாவி வாயூறினாற் போல" சிவஞானபோதமா பாடியம், சூ. 6 ; அதிகரணம், 2 ; வெண்பா, 5.

2. "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி, தொகுத்தார்க்குந் துய்த்த லரிது" (குறள். 377), "அளந்துதாங் கொண்டு காத்த வருந்தவ முடைய நீரார்க், களந்தன போக மெல்லா மவரவர்க் கற்றை நாளே, யளந்தன வாழு நாளும்" (சீவக. 213), "தந்தம், விதியின் பயனே பயன்" (மூதுரை. 19), "தாந்தாமுன் செய்தவினை தாமே யனுபவிப்பார், பூந்தா மரையோன் பொறிவழியே" நல்வழி. 30.

4. "இல்லை என்பது 'இல்' என நின்றது ; 'காரெனச் செய்தாரு மில்' என்றாற் போல" நீலகேசி. மொக்கல. 101- சமயதிவாகரமுனிவருரை.

3-4. "விளங்காய்......செய்தாருமில் : என்பதே காட்டினார் உரையாசிரியரும்" தொல். நூன்மரபு. சூ. 10 - ந.

மு. நாலடி. 105, 109 ; " வளம்பட......செய்தாருமில் : இது, நான் கடியாய் மூன்றாம் அடி இறுதி, தனிச்சொற்பெற்று வருதலின் நேரிசைப் பாற்படும் " (தொல். செய். சூ. 113 - இளம்), " மூன்றாம் அடியின் இறுதி, தனிச்சொற்பெற்று இரண்டுவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பா " (யா - கா. செய். சூ. 5), " இனி, வெண்பாப்போலியாவது இவ்விலக்கணங் களான் மிக்கும் குறைந்தும் இதுவே போலவரும் ; வரலாறு : ' வளம்பட...... செய்தாருமில் ' இது, நடுவு தனிச்சொலின்றி மூன்றாமடி குறைந்து நான்கடி யாய்ப் பதினைந்து சீராய்வந்தது " (வீர. யாப்பு. சூ. 21), " பலவிகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா " (யா - வி. செய். சூ. 8), " அளவடியானும் செப்ப லோசையானும் வந்த வெண்பா " யா - கா. செய். சூ. 2 ; இ - வி. சூ. 721.

104. உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா
பெறற்பா லனையவு மன்னவா மாரி

*வறப்பிற் றருவாரு மில்லை யதனைச்*
*சிறப்பிற் றணிப்பாரு மில்.*

1. "*உறற்பால, தீண்டா விடுத லரிது*", "*உறற்பால யார்க்கு முறும்*" (நாலடி. 109, 117; பழ. 15), "*விழுமிய, வேண்டினும் வேண்டா விடினு முறற்பால, தீண்டா விடுத லரிது*" (பழ. 62), '*மன்னுப் பொருளு மன்ன வியற்றே*' என்ற (தொல். கிளவி. 34) சூத்திரத்தின் உரையில் இவ்வடியை மேற்கோள் காட்டுப (ஷை ஷை ஷை சே; ந; இ - வி. சூ. 315.) உறுவர் - முனிவர்; (சீவக. 2376 - ந) தேவரெனக்கூறினுமமையும்; வலிமைமிக்கவர் என்பாருமுளர்.

3. வறப்பின் - வறண்டால்.

4. சிறப்பின் - மிகுமாயின்.

மு. "*ஊழ்வினை யுருத்துவந் தூட்டும்*" (சிலப். பதி. 57), "*ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழியாது*" (இறை. சூ. உ - உரை), "*இட்டவித்தினெதிர்ந்துவந் தெய்தி, யொட்டுங்காலை யொழிக்கவு மொண்ணு*" (சிலப். 10: 172 - 3) என்பதனுரையில் இச்செய்யுளை மேற்கோள்காட்டினர் **அடியார்க்குநல்லார்.**

105. *தினைத்துணைய ராகித்தந் தேசுள் ளடக்கிப்*
*பனைத்துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வார்*
*நினைப்பக் கிடந்த தெவனுண்டா மேலை*
*வினைப்பய னல்லாற் பிற.*

1. தேசு - புகழ்; "*திருவுந் தேசு நோக்குமின்*" சீவக. 771 - ந.

2. வைகலும் - நாடோறும். பாடு - பெருமை; நாலடி. 187, 252, 281, 292.

1-2. '*தினை, பனை*' என்பன சில அளவுகள்; குறள். 104, 224, 433, 1282.

மு. நாலடி. 103 குறிப்பைப்பார்க்க.

106. *பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவுங்*
*கல்லாதார் வாழ்வ தறிதிரே—கல்லாதார்*
*சேதன மென்னுமச் சேறகத் தின்மையாற்*
*கோதென்று கொள்ளாதாங் கூற்று.*

1. ஆன்ற - அமைந்த. பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் : நாலடி. 252.

2. கல்லாதார் : நாலடி. 249.

3. சேதனம் - சைதன்யம்; (ஞானமிர்தம், 1, 4, 27, 51). சேறு - ஸாரம். "*சேறுபடு மலர்சிந்த விரைந்தே*", "*சேறுபடு கோதை*" (சீவக. 426, 2019), குழம்பு எனலுமாம்; ஞானமிர்தம், 43.

4. கோது-பயனில்லாத கூறு ; (நாலடி. 34) "கோது செய்குணக் கோதி னுட் கோதனென்" சீவக. 240 ; சிவஞானபோதமாபாடியம், சூ. 9 ; அதி, 1 - மேற்கோள்.

107. இடும்பைகூர் நெஞ்சத்தா ரெல்லாருங் காண
நெடுங்கடை நின்றுழல்வ தெல்லா—†மடும்பம்பூ
வன்னங் கிழிக்கு மலைகடற் றண்சேர்ப்ப
முன்னை வினையாய் விடும்.

1. இடும்பை - துன்பம் ; சீவக. 252 : 4.

2. நெடுங்கடை : பெருங். 1. 47 : 5. உழலுதல் - சுழலுதல் ; ஈண்டுப் போக்குவரவு (ஞானமிர்தம், 4). அடும்பு - ஒருவார்கொடி ; கலி. 132.

மு. நாலடி. 31 ; சீவக. 2680.

108. அறியாரு மல்ல ரறிவ தறிந்தும்
பழியொடு பட்டவை செய்தல்—*வளியோடி
நெய்த னறவுயிர்க்கு† நீள்கடற் றண்சேர்ப்ப
செய்த வினையான் வரும்.

1. அறிவதறிந்தும் : நாலடி. 74 : 1.

3. கடல் தண் சேர்ப்ப : நாலடி. 97.

மு. "நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்த, னுண்மை யறிவே மிகும்" (குறள். 373), "ஒழிகென வொழியா தூட்டும் வல்வினை" சிலப். 10 : 171.

(பி - ம்) * 'வழியோடி' † 'நீள் கழித்தண் சேர்ப்ப'

109. ஈண்டுநீர் வையத்து ளெல்லாரு† மெத்துணையும்
வேண்டார்மற் றீய § விழைபய னல்லவை
வேண்டினும் வேண்டா விடினு முறற்பால
தீண்டா விடுத லரிது.

1. ஈண்டுநீர் - நிறைந்த கடல் சூழ்ந்த ; பெருநீர் என்றுமாம்.

3 - 4. மு. பழமொழி, 62 : 3 - 4 ; நாலடி. 109; "உறற்பால...... அரிது", "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா", "உறற்பால யார்க்கு முறும்" (நாலடி. 104, 117), "பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச், சொரியினும் போகா தம" (குறள். 376), "திருவுறு கின்றுழி மகிழ்ந்துந் தீர்வுழிப், பருவர லெய்தியும் பாசந் தன்னிடை, யரிதுணர் கேள்விய ரழுங்கு வார்கொலோ, வருவது வருமது மறுக்க லாகுமோ" (கந்த), உறற்பால......அரிது' என்றாற்போல ஈண்டு' அருமை, இன்மை மேனின்றது" குறள். 7 - பரிமேல்.

(பி - ம்) † 'எட்டுணையும்' § 'வினைப்பயனல்லது', 'வினைபமனல்லவை'

110. சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
வுறுகாலத் தூற்றாகா வாமிடத்தே யாகுஞ்
சிறுகாலைப் பட்ட பொறியு மதனா
லிறுகாலத் தென்னை பரிவு.

1. "கட்டுண்ண வேண்டும் பாவம் ஆண்டின்மையுணர்க; பிறரும் இச் சமயத்தார், 'சிறுகா பெருகா முறை பிறழ்ந்து வாரா' என்றதனானுமுணர்க" சீவக. 1089 - ந.

2. உறுகாலத்தூற்றாகா - துன்பமுறுங்காலத்திலூன்றுகோல்போல உதவ மாட்டா; நாலடி. 117.

3. பொறி - பயனைத் தருவதாய விதி; குறள். 618. சிறுகாலைப்பட்ட பொறியும்: நாலடி. 35; சீவக. 475.

2 - 3. ஆமிடத்தே யாகுஞ் சிறுகாலைப் பட்ட பொறியும்: "ஈண்டுங்கா லீண்டும்......செல்வம்" (நாலடி. 93), "செல்வந் தொகற்பால போழ்தே தொகும்" பழ. 120.

4. "அன்றாங்கா, லல்லற் படுவ தெவன்" குறள். 379.

மு. "இன்பம தடைந்த காலை யினிதென மகிழ்ச்சி செய்யார், துன்பம துற்றபோதுந் துண்ணெனத் துளங்கிச் சோரா, ரின்பமுந் துன்பந் தானு மிவ் வுடற் கியைந்த வென்றே, முன்புறு தொடர்பை யோர்வார் முழுவது முணர்ந்த நீரார்" (கந்த), "வருந்தி யழைத்தாலும் வாராத வாரா, பொருந்துவன போமி னென்றாற் போகா - விருந்தேங்கி, நெஞ்சம்புண் ணாக நெடுந்தூரந் தாநினைந்து, துஞ்சுவதே மாந்தர் தொழில்" (நல்வழி. 5), "சாதலும் பிறத்த றானுந் தம்வினைப் பயத்தி னாகு, மாதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய், நோதலும் பரிவு மெல்லா நுண்ணுணர் வின்மை யன்றே, பேதைநீ பெரிதும் பொல்லாய் பெய்வளைத் தோளி யென்றான்" சீவக. 269.

---

## ஐந்தாம் அதிகாரம், மெய்ம்மை.

111. இசையா வொருபொரு ளில்லெனல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை—நசையழுங்க
நின்றோடிப் பொய்த்த னிரைதொடீஇ செய்ந்நன்றி
கொன்றாரிற் குற்ற முடைத்து.

1 - 2. இசையாவொருபொருள்........வசையன்று: சொல்லெச்சத்திற்கு (நன் - மயிலை. சூ. 395; நன் - வி. சூ. 360) மேற்கோள்.

3 - 4. செய்ந்நன்றி கொன்றாரிற் குற்றமுடைத்து : "எந்நன்றி கொன் றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" குறள். 110.

மூ. "ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கு, மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு, மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே, யொல்லா தொல்லு மென்றலு மொல்லுவ, தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே, யிரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர், புகழ்குறை படூஉம் வாயில்" (புறம். 196), "இசைவ கொடுப்பதூஉ மில்லென்பதூஉம், வசையன்று வையத் தியற்கை யஃதன்றிப், பசைகொண் டவனிற்பப் பாத்துண்ணு னாயி, னசைகொன்றான் செல்லுலக மில்" (பழ. 24), "சிதைவகல் காதற் றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப், பதவியந் தணரை யாவைப் பாலரைப் பாவைமாரை, வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றன் மாயா, வுதவிகொன் றார்க்கொன் றேனு மொழிக்கலா முபாய முண்டோ" இராமாவதாரம்.

112. தக்காருந் தக்கவ ரல்லாருந் தந்நீர்மை
யெக்காலுங் குன்ற லிலராவ—ரக்காரம்
யாவரே தின்னினுங் கையாதாங் கைக்குமாந்
தேவரே தின்னினும் வேம்பு.

1. நீர்மை—குணம்.

2. குன்றலிலராவர்—குறையார். அக்காரம்—சருக்கரை.

2-4. "அக்காரம்.........வேம்பு: என்றவழி, 'யாவர்' என்பது இழிவு குறித்துநின்றது; 'தேவர்' என்பது உயர்வுகுறித்துநின்றது" தொல். இடை. சூ. 7 - இளம்; பேர்; கல்.

3 - 4. "கைக்குமே, தேவரே தின்னினும் வேம்பு" (பழ. 114), "கைக் குமாந், தேவரே தின்னினும் வேம்பு : என்றவழி, ஏகாரம் சிறப்புக்குறித்து நின் றது" (தொல். இடை. சூ. 46 - பேர்), "கைக்குமாம்.........வேம்பு : இஃது இழிவுசிறப்பு" நேமி. சூ. 52.

113. காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாய மீனிற் பலராவ—ரேலா
விடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட
தொடர்புடைய மென்பார் சிலர்.

1. "கண்ணுடி வென்று" (சீவக. 2327) என்பதற்கு, "கண் எல்லாரிடத் தும் உலாவி வென்று' எனப்பொருள் கூறி, "காலாடு போழ்தின்' என்றாற் போல" எனக் கூறுவர் நச்சினார்க்கினியார்.

2. மீன் - நட்சத்திரம்.

மூ. நாலடி. 283, 284, 290; பெருங். 3. 21 : 94; புறம். 217 : 4 - 6; "கெட்டார்க்கு நட்டா ரில்லென் பதோ" (குறள். 752, 799, 1293), "முட்டின்

ஒருருவருடைய பொழுதின்க, ணட்டிற்றுத் தின்பவ ராயிரவ ராபவே, கட்டலர்தார் மார்ப கலியூழிக் காலத்துக், கெட்டார்க்கு நட்டாரோ வில் " (பழ. 59), "பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணிற் போற்றி யென்றேற் றெழுவ, ரிருள்கொ டுன் பத் தின்மைகாணி லென்னே யென்பாரு மில்லை" (திருவாய்மொழி. 9. 1 : 3), " அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோ, லுற்றுழித் தீர்வா ருறவல்ல - ரக்குளத் திற், கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே, யொட்டி யுறுவா ருறவு " மூது ரை. 17; சீவக. 2535.

114. வடுவிலா வையத்து மன்னிய மூன்று
ணடுவண தெய்த விருதலையு மெய்து
நடுவண தெய்தாதே லெய்து முலைப்பெய்
தடுவது போலுந் துயர்.

1 - 2. " அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு ", " ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கொண்பொரு, ளேனை யிரண்டு மொருங்கு " (குறள். 247, 760), " எல்லாம், பொருளிற் பிறந்து விடும் " (நான்மணி. 7), " பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே யம்மூன்று, மாராயிற் றானே யறம்பொரு ளின்பமென், றாரா ரிவற்றி னிடையதனை யெய்துவார், சீரா ரிருதலையு மெய்துவர் " (வேங்கைக்கோவை, 262), " இல்லா ரிருமையு நல்ல வெய்தார் ", " வறியா ரிருமையு மறியார் " பழ.

மூ. " கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயி, னெல்லா ருஞ் சென்றங் கெதிர்கொள்வ - ரில்லானை, யில்லாளும் வேண்டாண்மற் றீன் றெடுத்த தாய்வேண்டாள், செல்லா தவன்வாயிற் சொல் " (நல்வழி, 34), " இன் சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல், வன்சொல்லி னல்லது வாய் திறவா - வென்சொலினுங், கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன் ஞாலம் " (நீதிநெறி. 11), "பணந்தானே யறிவாகும் பணந்தானே வித்தையு மாம்......பணமில்லா தவர்பிணமாம் பான்மை சேர்வர்" (தண்டலை)

115. நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉங்
கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற்செல்லும்
புல்லீரப் போழ்தி னுழவேபோன் மீதாடிச்
செல்லாவா நல்கூர்ந்தார் சொல்.

1. நாகு—ஈனுக்கிடாரி ; பெருங். 1.39: 64 ; பெரிய. ஆனாய. 11.

4. " நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார், சொற்பொருள் சோர்வு படும் " (குறள். 1046), " இல்லானை, யில்லாளும் வேண்டாண்மற் றீன் றெடுத்த தாய்வேண்டாள், சொல்லா தவன்வாயிற் சொல் " (நல்வழி, 34), "ஏழை சொல் அம்பல மேறுது ? பழமொழி.

116. இடம்பட நன்ஞானங் கற்பினு மென்று
மடங்காதா ரென்று மடங்கார்—தடங்கண்ணா
யுப்பொடு நெய்†பா லயிர்காயம் பெய்தடினுங்
கைப்பறு பேய்ச்சுரையின் காய்.

3. அயிர் - சருக்கரை; வெல்லமுமாம்; காயம் - உறைப்பு; "காயங்கொண்ட விஞ்சி" மலைபடு. 126.

3 - 4 "ஐங்காய மிட்டரைத்துக் கரைத்தாலுந், தன்காரம் போகாதாம் பேய்ச் சுரைக்காய்" (பழமொழி) உம்மைச்சொல் உயர்வுசிறப்புக்குறித்து வந்ததற்கு (தொல். இடை. சூ. 7-ந) மேற்கோள்.

மூ. 'தடங்கண்ணாய்' என்று மகடூஉமுன்னிலை பெற்றுவருதற்கு (யா - கா. சூ. 4) மேற்கோள்.

(பி - ம்.) † 'பாறயிர்காயம்பெய்திடினும்'

117. தம்மை யிகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க
வென்னை யவரொடு பட்டது—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
வுறற்பால யார்க்கு முறும்.

1 - 2. "கதநன்று சான்றாண்மை தீது கழிய, மதநன்று மாண்பில்லார் முன்னர்"

3. விறல் - (தீநாற்றம் போக்கும்) வலி.

4. "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா", "உறற்பால, தீண்டா விடுதலரிது" (நாலடி. 104, 109), "உறற்பால யார்க்கு முறும்", "உறற்பால, தீண்டா விடுத லரிது" (பழ. 15, 62), "ஆமே யொருவ ரொருவர்க் கிடரை யகற்றுவது, மாமே யொருவ ரொருவர்க் கிடர்நன்மை யாக்குவதுந், தாமேது செய்தன ரன்னது தாமே புசிப்பதன்றிப், போமே தலையிற் பொறித்தான் பிறழ்ந்து நினைப்பினுமே" விநாயக.

118. ஆவே றுருவின வாயினு மாபயந்த
பால்வே றுருவின வல்லவாம்—பால்போ
லொருதன்மைத் தாகு மறநெறி யாப்போ
லுருவு பலகொள லீங்கு.

2 - 4. 'பால்போல்......ஈங்கு: சிவஞானபோதமாபாடியம், சூ. 8; அதி. 1; வெண்பா, 1. மேற்கோள்.

மூ. "இதனால் அருகனை மும்மூர்த்திகளும் பிறரும் நீயெனப்புகழ்ந்ததாம்; 'ஆவே றுருவின......பலகொள லீங்கு' என்றாராகலின்" (திருநூற்று. 67),

லகரவொற்றிடை வந்த ஆசிடையெதுகைக்கு (யா - வி. தொடை. சூ. 37; யா - கா. ஒழிபு. சூ. 6; வீர. யாப்பு. சூ. 5; இ - வி. சூ. 748) மேற்கோள்.

119. யாஅ ருலகத்தோர் சொல்லில்லார் தேருங்கால்
யாஅ ருபாயத்தின் ‡வாழாதார்—யாஅ
ரிடையாக வின்னாத தெய்தாதார் யாஅர்
கடைபோகச் §செல்வமுய்த் தார்.

4. கடைபோக—(வாழ்நாளின்)முடிவுவரையில்; "ஈறு கடைபோக வெனக் கரு ளென்றலும்" மணிமேகலை

(பி - ம்) ‡ 'வாழாதாரியார்' § 'செல்வமுருள்'

120. தாஞ்செய் வினையல்லாற் றம்மொடு செல்வதுமற்
றியாங்கணுந் தேரிற் பிறிதில்லை—யாங்குத்தாம்
போற்றிப் புனைந்த வுடம்பும் பயனின்றே
கூற்றங்கொண் டோடும் பொழுது.

2. யாங்கணும்—எவ்வுலகத்தினும்.

மூ. கருத்து: "ஈட்டிய வொண்பொருளு மில்லொழியுஞ் சுற்றத்தார், காட்டுவாய் நேரே கலுழ்ந்தொழிவர்—மூட்டு, மெரியி னுடம்பொழியு மீர்ங்குன்ற நாட, தெரியி னறமே துணை" (அறநெறி. 147), "மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாசல்மட்டே, இனமான சுற்ற மயான மட்டேவழிக் கேதுதுணை, தினையா மளவெவ் வளவாகினு முன்பு செய்ததவந், தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே", "அத்தமும் வாழ்வு மகத்துமட்டே விழியம் பொழுக, மெத்திய மாதரும் வீதிமட்டே விம்மி விம்மியிரு, கைத்தலை மேல் வைத்தழு மைந்தருஞ் சுடுகாடு மட்டே, பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே" பட்டினத்தார்; நான்மணி. 34.

---

## ஆறும் அதிகாரம், தீவினையச்சம்.

121. துக்கத்துட் டூங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்குங் காடே புலங்கெட்ட
புல்லறி வாளர் வயிறு.

2. பிணத்த, பலவின்பாற்படர்க்கை வினைக்குறிப்புமுற்று.

மூ. 'ஈவானே தெய்வம்' (பன்னூற்றிரட்டு, 679) நரகசேடமானது, மறு சென்மத்தினும் துக்கந்தருமென்பதற்கு (கொலைமறுத்தல், 4) மேற்கோள்.

122. இரும்பார்க்குங் காலரா யேதிலர்க் காளாய்க்
கரும்பார் கழனியுட் சேர்வர்—சுரும்பார்க்குங்

காட்டுளாய் வாழுஞ் சிவலுங் குறும்பூழுங்
கூட்டுளாய்க் கொண்டுவைப் பார்.

1. " இரும்பார்க்குங் காலரா யேதிலார்க் காளாய்.........என்னும் பாட்டுக்கள்போல ஆய் என்னுஞ் சன் கொடுத்து விரவாவினையெச்சமாக்குவர் " (பிர யோக. சூ. 39), " இரும்பார்க்கும்.........ஆளாய்' என்பதுபோல நின்றன, கெடுதல் விகாரப்பட்டு நின்றனவென்பாரும், ஆயென்னுமொழி வருவிக்கவேண்டுமென்பாருமுளர் " இ - கொ. சூ. 89.

3. சிவல் - கவுதாரி. குறும்பூழ் - காடை.

2 - 3. கரும்பு + ஆர் + கழனி ; கரும் + பார் + கழனி - இருள் நெருங்கிய துன்பம் விளைக்கும் நிலம் ; ஆவது நரகம்.

மூ. சீவகசிந்தாமணிக்காப்பியத்தலைவனாகிய சீவகன், முற்பிறப்பில் ஓரன்னப்பார்ப்பைச் சிறைசெய்தமையான் மறுபிறப்பில் சிறைபட்டான் எனக் கூறியிருத்தல் ஈண்டறிதற்பாலது. " பூவை கிளி தோகை புணரன்னமொடு பன்மா, யாவையவை தங்கிளையி னீங்கியழ வாங்கிக், காவல் செய்து வைத்தவர்கடங்கிளையி னீங்கி.........கண்டாய் " சீவக. 2875, 2893, 2848.

நரகசேடமானது மறுசென்மத்திலும் துக்கந்தருமென்பதற்கு (கொலை மறுத்தல், 4) மேற்கோள்.

123. அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே—யக்கா
லலவனைக் காதலித்துக் கான்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்.

1 - 2 " செயிருடம்பினராதல்: 'அக்கேபோலங்கை...எழுபவே' என்பதனாலு மறிக " குறள். 330 - பரிமேல்.

மூ. கருத்து : அறநெறி. 95; " பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும் " (குறள். 319), " முற்பகற் கண்டான் பிறன்கேடு தன்கேடு பிற்பகற் கண்டு விடும் " (பழ. 130), " முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண் " (சிலப். 21 : 3 - 4), "முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்" (கொன்றைவேந்தன்,) "முற்பகல் செய்வினை பிற்பக லுறுநரின் " பெருங். 1. 56: 259.

124. * நெருப்பழற் சேர்ந்தக்கா னெய்போல்வ தூஉ
மெரிப்பச்சுட் டெவ்வநோ § யாக்கும்—பரப்பக்
கொடுவினைய ராகுவர் கோடாருங் கோடிக்
கடுவினைய ராகியார்ச் சார்ந்து.

1. "நெய்போல்வதூஉம் - நெய்யும்; போல்வதும், ஒப்பில்போலி; "வாரார் போல்வர்நங் காதலர்" (குறுந்.-103) என்புழிப்போல. "போலும் போல்வது என்னுந் தொடக்கத்துப் பலவாய்பாடுந் தழுவுதற்குப் போலியென்றார்; நெருப் பழல்.....போல்வதூஉம்' என்பதுமது" (தொல். இடை. சூ. 30-சே), "நெருப் பழற் சேர்ந்தக்காலெனெய்போல்வதூஉம் எனவும்.....குற்றெழுத்து நிற்குமிடத்தும் சிறுபான்மை அசைநிலையாக அளபெடுத்து வந்தது காண்க" (பிரயோக. சூ. 5), "தீயகந்தமுள்ள தொன்றைச் சேர்ந்திருப்ப தொன்றற்குத், தீயகந்த மேறுந் திற மதுபோ - றீய, குணமுடையோர் தங்களுடன் கூடி யிருப்பார்க்குக், குண மதுவே யாஞ்செறிவு கொண்டு" நீதிவெண்பா.

1 - 2. "நெருப்பழற்.....ஆக்கும்: எனப்போலுமென்னுமிடைச்சொல் நெய்யைப்புனைந்து நின்றவாறு காண்க" (தொல். இடை. சூ. 30 - ந), 'நெருப் பழல்.....ஆக்கும்: எனப் போல்வதும் சிறுபான்மை அசைநிலையாதலும்" இ - வி. சூ. 277; இ - கோ. சூ. 90.

மு. நாலடி. 13, 136; கொலைமறுத்தல், 4 - மேற்.

(பி - ம்) * 'நெருப்பெழச்சேர்ந்தக்கால்' § 'நோயார்க்கும்'

125. பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு.

1 - 2. "வளர்பிறை போல வழிவழி பெருகி" குறுந். 289; பெருங். 1. 46 : 309 ; 2. 6 : 35.

3. "ஊர்தல் - ஈண்டுப்போதல்மேற்று; "வானூர்மதியம் போல" சீவக. 286—ந.

3 - 4. நாலடி. 204 : 1 - 2.

மு. நாலடி. 136, 138, 166, 224, 234; புறம். 27; "குடமுதற் றோன்றிய தொன்று தொழு பிறையின், வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற் றங், குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற், றேய்வன கெடுகநின் றெவ்வ ராக்கம்" (மதுரை. 193 - 6), "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின் னீர பேதையார் நட்பு" (குறள். 782), "துணவிருத்திகாரர், 'பெரியவர்........ தொடர்பு' என்பதனுள் 'தானேஎன்னும் சுயமேவபதந்தொடர்ந்த 'நந்தும்' 'தேயும்' என்னும் அகன்மகபாஸ்மைபதமென்னுஞ் செயப்படு பொருள்குன்றியவினை முற்றுச்சொல்லோடுவருங் கருமத்தைக் கருமகருத்தாவென்பர்" (பிரயோக. சூ. 11; இ - கோ. சூ. 26), "இவ்வினைமுதற்பொருள், "பெரியவர்...... தொடர்பு': என்பதனுள் 'கேண்மை தானேநந்தும்; தொடர்புதானே தேயும்' எனச் செயப்படுபொருட் கண்ணும்வரும்" (நன் - வி. சூ. 296) மேற்கோள். சீவக. 1416. 3-4.

126. சான்றோ ரெனமதித்துச் சார்ந்தாய்மற் சார்ந்தோய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்க ணில்லாயிற்—சார்ந்தோய்கேள்
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
† பாம்பு கண்டன்ன துடைத்து.

1. மன் - மிகவும் ; அசைநிலையுமாம்.
3-4. "சாந்து......உடைத்து' என்பது அச்சமாகலின் அச்சவுவமை" தொல். உவம. சூ. 1 - பேர்.
பி - ம் † 'பாம்பகத்துக் கண்டதுடைத்து'

127. யாஅ ரொருவ ரொருவர்தம் முள்ளத்தைத்
தேருந் † துணிமை யுடையவர் சாரற்
கனமணி நின்றிமைக்கு நாடகேண் மக்கண்
மனம்வேறு செய்கையும் வேறு.

2. துணிமை - துணியுந்தன்மை ; அறிவு; நாலடி. 11.
3. கனம் - மிக்க.
(பி - ம்) † 'துணைமையுடையவர்'

128. உள்ளத்தா னள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தா னட்டார் ‡ கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பி நின்றலைக்கும் பூங்குன்ற நாட
மனத்துக்கண் மாசாய் விடும்.

2. தெள்ளி - தெளிந்து.
3. செதும்பல் - சிறுகிவடிதல் ; ஆவது, சின்னீர் ; கலி. 48 - ந.
4. மாசு - துன்பம்.
(பி - ம்) ‡ 'கழிகிளைமை'

129. ஒக்கிய வொள்வாட்ன் னென்னார்கைப் பட்டக்கா
லாக்க மழிப்பதூஉ மெய்யாகு—§ மாக்க
மிருமையுஞ் சென்று சுடுதலா னல்ல
கருமமே கல்லார்கட் டீர்வு.

1. ஒக்கிய - ஓங்கிய ; "ஒக்கிய முருகன் வைவே லொன்றிரண் டனைய கண்ணாள்" (சீவக) என்புழிப்போல.
(பி - ம்) § 'ஆக்க மிருமையுஞ் சிதைத்தலால்'

130. மனைப்பாசங் கைவிடாய் மக்கட்கென் றேங்கி
யெனைத்தூழி வாழ்தியென் னெஞ்சே—யெனைத்துஞ்

சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லா
லுறுபயனோ வில்லை யுயிர்க்கு.

1. மனைப்பாசம்- மனைவாழ்க்கைப்பற்று ; மனைவியாகிய பிசாசு எனலுமாம்; “ பலிகொண்டு பெயரும் பாசம்போல ”, “பலிகொண்டு பேராத பாசமிவள் கண்” என்புழியும் காண்க.

3 - 4. நாலடி. 120 : 1 - 2 ; குறள். 391 - 400; “ சிறுவரையே...... உயிர்க்கு ’ எனவரும் இது, தன்னாற் செய்யப்பட்ட நன்றல்லது உயிர்க்கு உறுபய னில்லையென உருபுச்சொல்வந்தமையெப்பாற்படுமோவெனின், உருபுச்சொல் லும் வினை வினைக்குறிப்பாயடங்குதலின், வினையெச்சத்தின்பாற்படுமென்க ” நன் - மயிலை. சூ. 359.

இரண்டாவது இல்லறவியல் முற்றும்
முதலாவது, அறத்துப்பால் முற்றும்.

---

## இரண்டாவது, பொருட்பால்.

### முதலாவது அரசியல்

### முதலாவது, கல்வி.

131. குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு
மஞ்ச ளழகு மழகல்ல—நெஞ்சத்து
நல்லமியா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு.

1. குஞ்சி - ஆண்பால் தலைமயிர். தானைக்கோடு - பட்டுக்கரை சரிகைக் கரையை யுடைய ஆடைகள்.

2. மஞ்சள் - அரிதாரத்தினாலாண்பாலார் நெற்றியிலணியும்பொட்டு; ஆவது திலகம்

மு. “ மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பு, முகிர்வனப்புங் காதின் வனப்புஞ் - செயிர்தீர்ந்த, பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த, சொல் லின் வனப்பே வனப்பு” (சிறுபஞ்ச......), “இடைவனப்புந் தோள்வனப்பு மீடின் வனப்பு, நடைவனப்பு நாணின் வனப்பும் - புடைசால், கழுத்தின் வனப்பும் வனப் பல்ல வெண்ணோ, டெழுத்தின் வனப்பே வனப்பு ” ஏலாதி. 75 ; குறள், 392, 407. தக்கயாகப்பரணி, 328 - உரை மேற்கோள்.

132. இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றா
லெம்மை யுலகத்து மியாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து.

மூ. இச்செய்யுளை, ஓதற்சிறப்புக்கு மேற்கோள் காட்டுவர் நச்சினார்க்கினியர்; (தொல். புறத்திணை. சூ. 20) கருத்து: "ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார், நாற்றிக்குஞ் செல்லாத நாடில்லை நாடுங்கால், வேற்றுநா டெல்லாந் தமவேயா மாதலா, லாற்றுணா வேண்டுவ தில்" (பழ. 55), "தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கு, மடங்கொன் றறிவகற்றுங் கல்வி", "அறம் பொருளின்பமும் வீடும் பயக்கும்......கல்வியி னூங்கில்லைச். சிற்றுயிர்க் குற்ற துணை" (நீதிநெறி. 3, 2.)

133. களர்நிலத்துப் பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் *கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

1. களர்நிலம் - 'புலாலு மூனும் புதைபடு சேறு, மூவர்நீர்க் குழியுங் கவர்புள் ளினமும்' நிரம்பப்பெற்று நல்லோரடியிடு நெறியல்லாதிருக்கும் நிலம்.

3 - 4. படும் என்னும் சொல் ஐம்பால் மூவிடத்தனவாமென்றற்கு. (இ - கொ. சூ. 85; இ - வி. சூ. 213; நன் - வி. 339) மேற்கோள்.

மூ. "வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங், கீழ்ப்பா லொருவன் கற்பின், மேற்பா லொருவனு மவன்கட் படுமே" (புறநானூறு. 183), "நாற்பாற் குலத்தின் மேற்பா லொருவன், கற்றிலனாயிற் கீழிருப் பவனே", "எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினு, மக்குடிக் கற்றோரை மேல்வரு கென்பர்" (வெற்றி வேற்கை), "ஆக்கு மறிவா னலது பிறப்பினான், மீக்கொ ளுயர் விழிவு வேண்டற்க" (நீதிநெறி), "மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங், கற்றா ரனைத்திலர் பாடு" குறள். 409.

(பி - ம்) * "கற்றுணர்ந்தோரை"

134. வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வா
ரெச்ச மெனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற.

1. வாய்த்தீயில் : நாலடி. 286 ; பழ....

3. எச்சம் - எஞ்சியபொருள்.

மூ. குறள். 280 ; "கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு, மாடல்ல மற்றை யவை", "தந்தை மகற்காற்று நன்றி யவையத்து, முந்தி யிருப்பச் செயல்" (குறள். 67), என்பதையும் "அழிவின்மையாவது - தாயத்தார் கள்வர் வலியர் அரசரென்றிவராற்கொள்ளப்படாமையும் வழிபட்டார்க்குக் கொடுத்துழிக்

குறையாமையுமாம்" (குறள். 400) பரிமேலழகர் உரையும் கவனிக்கத்தக்கன. "வெள்ளத்தாற் போகாது வெந்தழலால் வேகாது" நுசேலோபாக்கியானம்.

135. கல்வி கரையில கற்பவர் நாட்சில
மெல்ல நினைப்பிற் பிணிபல தெள்ளிதி
னாராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து.

1-2. நான்மணி 78; "மனிதர்க்கு வயது நூறல்ல தில்லை, யைம்ப திரவி லகலுந் துயிலினு, லொட்டிய விளமையி லோரைந்து நீங்கும், மாக்கை யிளமையி லைம்மூன்று நீங்கு, மெழுபது போகமிக் கிருப்பன முப்பதே, இன்புறு நாளுஞ் சிலவே", "அதான்று, துன்புறு நாளும்பலவே" என்பன ஒப்புநோக்கிக் கருதத்தக்கன.

4. பாலுண்குருகு-அன்னப்பறவை; "பானிறக் குருகி னுய்ந்து" (சீவக), "ஓதிமம்போலக், கலையாப் பொருடெரிந்து கைக்கொள்க." நுறுந்திரட்டு.

136. தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார்—காணாய்
யவன்றுணையா வாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்றுணையா நல்ல கொளல்.

1-2. "உடல்வயத் தாகுஞ் சாதி யுயர்ந்தவர் சாதி தாழ்ந்தோர், திடமுற வுயிரினோடு செல்லுறுங் கல்வி தம்மா, லடர்தரும் பெருமையெய்தார்" விநாயக.

3-4. நாலடி. 139: 1 - 2; புறம். 183: 8 - 10.

137. †தகலருந் தொல்கேள்வித் தன்மை யுடையா
ரிகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ‡ருறைவார் பதி.

1. தகலரும் - கெடுதலற்ற.

2 - 3. அறிவுபொருளாக உவகைபிறந்ததற்கு (தொல். மெய்ப்பாடு. சூ. 11 - பேர்; இ - வி. சூ. 578) மேற்கோள்.

மு. நாலடி 187, 233: 1 - 2; "கற்க கசடறக் கற்பவை கற்றபின், னிற்க வதற்குத்தக", "உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித லனைத்தே புலவர் தொழில்" குறள், 390, 394. தக்கயாகப்பரணி, கடைதிறப்பு. கஎ - உரை மேற்கோள்.

(பி - ம்) † 'தவலரும்' ‡ 'உறையும்'

138. கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
வீர மிலாளர் தொடர்பு.

1. “கனையென்னுமுரிச்சொல் ஒலித்தற்றொழிற்பண்பை யுணர்த்தியதற்கு” ‘கனைகடற்றண் சேர்ப்ப’ என்பது (நன் - மயிலை. சூ. 458; நன் - வி. சூ. 459) மேற்கோள்.

3. தூர் - வேர்.

4. ஈரம் - அன்பு.

ழ. நாலடி. 125, 166, 211, 390 : 3 - 4.

139. கல்லாரே யாயினுங் கற்றாரைச் †சேர்ந்தொழுகி
னல்லறிவு நாளுந் தலைப்படுவர்—தொல்சிறப்பி
னொண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு.

1 - 2. நாலடி. 124, 136 : 3 - 4.

3. புத்தோடு - புதுப்பானை.

ழ. “தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்த, மருண்ட தீமையை மாற்றுவ ரெனுமிது வழக்கே, யுருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் தோடி, யிருண்ட கல்லையுந் தன்னிற மாக்கின விரதம்” (இராமாவதாரம்), “நல்ல மண முள்ளதொன்றை நண்ணி யிருப்பதற்கு, நல்ல மணமுண்டா நலமதுபோ, னல்ல, குணமுடையோர் தங்களுடன் கூடியிருப் பார்க்குக், குணமதுவே யாஞ் சேர்வு கொண்டு” நீதிவெண்பா.

(பி - ம்) † ‘சார்ந் தொழுகில்’

140. அலகுசால் கற்பி *னறிவனூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாங்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.

1. அலகுசால் — எண்ணமைந்த. கற்பின்—கல்விகளில். அறிவனூல்—இறைவனுகமநூல்; அவை அங்கம், பூர்வம், பகுசுருதி என்பன.

2. “இதனால், மெய்ந்நூலால் உண்மை விளங்குவதல்லது பொய்ந்நூலுண்மை விளக்காவாதலின் மிச்சர் உணராரென்பதாம்; ‘உலகநூ லோதுவதெல்லாங் கலகல’ என்றார் பிறரும்.” (திருநூற்று. 15) உலகநூல்—“மந்திரங் கணிதம் வைத்தியஞ் சோதிடம் காப்பியம் புராணம் கண்மருள் சாலம் தொழில்வகை நூல்களும் பிறவுமாம்.”

2-4. கலகலவென்பது இரட்டைக்கிளவியாக வந்ததற்கு (நன் - மயிலை சூ, 395; நன்-வி. சூ. 396; பிரயோக. சூ. 39) மேற்கோள்

மூ. நாலடி. 52 : 3 - 4; "விளக்கு விலைகொடுத்துக் கோடல், விளக்குத் துளக்கமின் றென்னைத்துந் தூக்கி — விளக்கு, மருள்படுவ தாயின் மலைநாட வென்னை, பொருள் கொடுத்துக் கொள்ளா ரிருள்" பழ. 334.

(பி - ம்) * 'அறிவுநூல்'

---

## இரண்டாம் அதிகாரம், குடிப்பிறப்பு

141. உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணுங்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றா
ரிடுக்கண் †டலைவந்தக் கண்ணும் வரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று.

1. உடுக்கை, தொழிலாகுபெயர்; "உடுக்கை யிழந்தவன் கைபோல" (குறள். 788) என்புழியுங் காண்க.

1 - 2. "பீடில்லாக் கண்ணும் பெரியார் பெருந்தகையர்" (பழ. 96), "ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க, மிழிந்த பிறப்பாய் விடும்" (குறள். 133).

மூ. "ஒற்கந்தா முற்ற விடத்து முயர்ந்தவர், நிற்பவே நின்ற நிலையின் மேல்—வற்பத்தாற்; றன்மே னலியும் பசிபெரி தாயினும், புன்மேயா தாகும் புலி" (பழ. 119), "நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்து, மல்லன செய் தற் கொருப்படார்—பல்பொறிய, செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம், பைங்கட் புனத்த பைங்கூழ்" (நீதிநெறி. 61), 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது' உட்கொள்ளாவிடினும் கடிப்பது மில்லை என்பது கருத்து.

(பி - ம்) † 'தலைவந்தக் கண்ணுமரிமா.'

142. சான்றாண்மை சாய லொழுக்க மிவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது—வான்றோயு
மைதவழ் வெற்ப படாஅ பெருஞ்செல்வ
மெய்தியக் கண்ணும் பிறர்க்கு.

1. சாயல் - ஐம்பொறிகளாலும் நுகரப்படும் பலவகைமென்மைகளையும் உணர்த்துவதோருரிச்சொல்; சீவக. 8 - ந.

2. வான் - பெருமை. "வான்றோய் குடிப்பிறந்தார்க்கில்" (நாலடி. 69: 4) என்பதன் குறிப்பைப்பார்க்க; "வானுயர்தோற்றம்" என்பது, "வான் றோய்குடி, என்றாற்போல இலக்கணவழக்கு" குறள். 272 - பரிமேல்.

மூ. சிறுபஞ்ச. 24.

143. இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன குடிப்பிறந்தார்
குன்ற வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்ற வுணரற்பாற் றன்று.

1. "பணிவு - இருக்கையெழலு மெதிர்செலவு முதலாயின" (குறள். 960) என்பர் பரிமேலழகர்.

3. கயவர் - நற்குணங்கள் யாவும் இல்லாதோர்.

2-3. குறள். 961.

மு. பெருங்கதை, 1. 34: 110; வழிபாடு கூறியதற்கு (தொல். புறத் திணை. சூ. 20 - ந) மேற்கோள். "காணுறி லெழுந்திருத்தல் காதலித் தெதிரே செல்லல், பேணிநன் மொழிகள் சொல்லல் பின்பு போய்ச் செல்ல நிற்ற, லாணியா ஞானிக் கிவ்வா றனைவை செய்தன் மெய்யே, யேணியாம் பாகதிக்கிங் கேறுவோற் கென்ற னீசன்" சிவஞானநிலயம்.

144. நல்லவை செய்யி னியல்பாகுந் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகு—மெல்லா
முணருங் குடிப்பிறப்பி னூதிய மென்னோ
புணரு மொருவர்க் கெனின்.

3. ஊதியம்—இலாபம்.

மு. குறள். 951; ஏலாதி. 4; "குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின், மதிக்கண் மறுப்போ லுயர்ந்து", "ஒன்றாய்விடினு முயர்ந்தார்ப் படுங் குற்றங், குன்றின்மே லிட்டவிளக்கு" குறள். 957.

145. கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சஞ்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்ச—மெல்லா
மிரப்பார்க்கொன் றீயாமை யச்சம் † மரத்தாரிம்
மாணாக் குடிப்பிறந் தார்.

1. நன் - மயிலை. சூ. 451 மேற்கோள்.

2. சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்சம்: 'ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி, னன்றாகா தாகி விடும்" (குறள், 128) என்பவாதலின்.

2 - 3. இரக்கப்படுதல் - இரப்பார்க்கு ஈவலென்றிருத்தல்; அதனை இன்னதென்றது, 'எல்லா, மிரப்பார்க்கொன் றீயாமை' கூடுங்கொல்லோ வென்னும் அச்சநோக்கி" (குறள். 224 - பரிமேல்), "உரனொருவற் குள்ள வெறுக்கை யஃதிலார், மர மக்க ளாதலே வேறு". ஷை. 900; "தொண்டுமரம் போன்மகன்" சிறுபஞ்ச. 62.

(பி - ம்) † 'மரத்தாரம்'

146. இனநன்மை யின்சொலொன் றீதன்மற் றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாங்—கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப
விற்பிறந்தார் கண்ணே யுள.

3. உவரி—கடல்; உவர்ப்புடையது.

ழ. "நகை யீகை யின்சொ லிகழாமை நான்கும், வகையென்ப வாய்மைக் குடிக்கு" குறள். 953.

147: செய்கை யழிந்து சிதன்மண்டிற் றாயினும்
பெய்யா வொருசிறை பேரி லுடைத்தாகு
மெவ்வ முழந்தக் கடைத்துங் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை.

1. செய்கை - வேலைப்பாடு; குறள். 955.
2. ஒருசிறை - ஒருபக்கம்
3. உழந்தக் கடைத்தும் -
4. மு. நாலடி. 153 : 4; 185 : 4.

ழ. இச்செய்யுளின் கருத்து, 148, 149, 150, 184, 185-ஆம் செய்யுட்களிலும், (பழ. 81), "ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா, றூற்றுப் பெருக்கா லுலகூட்டு, மேற்றவர்க்கு, நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலு, மில்லையென மாட்டா ரிசைந்து" (நல்வழி, 9) என்பதிலும் அமைந்திருத்தல் காண்க.

148. ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
யங்கண்மா ஞாலம் விளக்குறூஉந்—திங்கள்போற்
செல்லாமை ‡ செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார்.

1-2. "அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந், திங்களுந் திங்குறுதல் லாண்டுபோல்" (பழ. 15). 'அணங்குவாள் விடவாய் வதுக்கு மொலையுங், குணங்கெடா தொளிவிரி குளிர்வெண் டிங்கள்போல்" (இராமாவ. மந்தரை சூழ்ச்சி. 45). சிறை - பக்கம்.

3. செல்லாமை - வறுமை. ஒப்புரவு: நாலடி. 149.

3-4. நாலடி. 141, 149: 1-2; "இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார், கடனறி காட்சி யவர்" (குறள். 218), "ஈட்டிய வொண்பொரு ளின்றெனினு மொப்புர, வாற்று மனைப்பிறந்த சான்றான்" பழ. 217.

(பி - ம்) 'செவ்வனே'

149. செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்—புல்வாய்
பருமம் பொறுப்பினும் பாய்பரி ‡ மாப்போற்
பொருமுரா ணாற்றுத லின்று.

1 - 2. "மாட மழிந்தக்கால் மற்று மெடுப்பதோர், கூட மரத்துக்குத் துப்பாகு மஃதேபோல், பீடிலாக் கண்ணும் பெருந்தகைய ரீடிலதற் கில்லை பாடு" பழ. 96.

3. பருமம்—குதிரை முதுகிற் போடும் சேணம்; (பெருங். 3 : 20 : 22), பெருமை எ - ம்; கலணை எ - ம் கூறுவாருமுளர்; நாலடி. 185.

ஔ. கருத்து: நாலடி. 148, 184, 358 : 1 - 2.

(பி - ம்) ‡ 'மாபோலப்பெருமுரண்'

150. எற்றொன்று மில்லா விடத்துங் குடிப்பிறந்தா
ரற்றுத்தற் † சேர்ந்தா ரசைவிடத் தாற்றுவ
ரற்றக் கடைத்து மகல்யா றகழ்ந்தக்காற்
றெற்றெனத் ‡ தெண்ணீர் படும்.

1. எற்று—எத்தன்மையது.

2. அசைவிடத்தாற்றுவர்—தளர்ந்த இடத்துப்பற்றுவர்.

4. தெற்றென—தெளிவாக; சீக்கிரத்தில்.

ஔ. கருத்து: நாலடி. 184, 185; "ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளு மவ்வா, றூற்றுப் பெருக்கா லுலகூட்டு—மேற்றவர்க்கு, நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலு, மில்லையென மாட்டா ரிசைந்து" (நல்வழி. 9.)

(பி - ம்) † 'சொற்றார்' ‡ 'தண்ணீர் படும்'

---

## மூன்றும் அதிகாரம், மேன்மக்கள்.

151. அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கண்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின்.

1. "அங்கண்மால் விசும்பு" மதுரை. 384.

2. "திங்களுஞ் சான்றோரு மொப்பர்......என்பன நிலைமைப்பொருள் வினையொடு முடிவதே தலைமையில் பொருளின் வினையு முடிந்ததாய்க் காரகமாம்" பிரயோக. சூ. 16.

1 - 2. பாரிக்கும்—பரப்பும்; கலி. 71; "அங்கண் விசுப்பி னகனிலாப் பாரிக்குந் திங்களும்" (பழ. 15) "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா, ருயிர் நீப்பர் மானம் வரின்", "குடிப்பிறந் தார்கண் விளங்குங் குற்றம் விசும்பின், மதிக்கண் மறுப்போ லுயர்ந்து" குறள். 969, 957.

மு. தனிச்சொற் பெற்றுப் பலவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பா விற்கும், (யா-வி. செய். 8; யா-கா-செய். 5), உயர்ச்சி வேற்றுமையணிக்கும் (தண்டி. சூ. 48), உயர்திணையும் அஃறிணையும் விரவிச் சிறப்பினான் உயர்திணை முடிபு பெற்றதற்கும் (தொல். கிளவி சூ. 15 - கல்; நேமி. சொல். 9; நன் - மயிலை. சூ. 377; நன் - வி. சூ. 378) மேற்கோள். "திங்கள், கறை யிருளை நீக்கக் கருதா துலகி, னிறையிருளை நீக்குமே யென்று" (நன்னெறி), "வந்து தோன்றிய மலர்கதிர் மண்டிலஞ், சான்றோர் தங்க ணெய்திய குற்றம், தோன்றுவழி விளங்குந் தோற்றம்போல, மாசறு விசும்பின் மறுநிறங் கிளர" (மணி. 6: 2 - 5), "விதிப்பட்ட நூலுணர்ந்து வேற்றுமை நீக்கிக், கதிப்பட்ட நூலினைக் கையிகந் தாக்கிப், பதிப்பட்டு வாழ்வார் பழியாய செய்தன், மதிப்புறத் திற்பட்டமறு" (அறநெறி. 162), "பெரியோருழையும் பிழைசிறு துண்டாகி, விரு நிலத்தில் யாரு மறியத் - தெரிவிக்குந், தேக்குங் கடலுலகில் யாவர்க்குந் தெள்ள முதம், வாக்கு மதிமேன் மறு" (வீர. அலங்காரப். 32.) மேற்கோள்.

152. இசையு மெனினு மிசையா தெனினும்
வசைதீர வெண்ணுவர் சான்றோர்—விசையின்
னரிமா வுளங்கிழித்த வம்பினிற் றீதோ
வரிமாப் பிழைப்பெய்த கோல்.

3 - 4. அரிமா—சிங்கம்; "கான முயலெய்த வம்பினில் யானை, பிழைத்த வே லேந்த லினிது" குறள். 772.

மு. குறள். 596, "பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி, னருமை யுடைய செயல்" குறள். 975.

153. நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண் டேறா—ருரங்கவா
வுள்ளமெனு நாரினாற் கட்டி யுளவரையாற்
செய்வர் செயற்பா லவை.

2. "கொதித்த வுள்ளமொடு குரம்புகொண் டேறி" மணி. 18: 3.

4. மு. நாலடி. 147 : 4; 185 : 4; 271.

மு. கருத்து: "அடந்து வறியரா யாற்றாத போழ்து, மிடங்கண் டறிவா மென் றெண்ணி யிராஅர், மடங்கொண்ட சாயன் மயிலன்னாய் சான்றோர், கடங் கொண்டுஞ் செய்வார் கடன்" (பழ. 216); "இடனில் பருவத்து மொப்புரவிற்

கொல்கார், கடனறி காட்சி யவர்", "சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற, குலம்பற்றி வாழ்துமென் பார்" (குறள். 218, 956), "நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்து, மல்லன செய்தற் கொருப்படார்" (நீதிநெறி. 61), "கடன்கொண்டுஞ் செய்வன செய்த லினிதே" இனியவை.

154. செல்வுழிக் கண்ணொருநாட் காணினுஞ் சான்றவர்
தொல்வழிக் கேண்மையிற் றோன்றப் புரிந்தியாப்பர்
நல்வரை நாட சிலநா ளடிப்படிற்
கல்வரையு முண்டா நெறி.

1. செல்வுழி: நாலடி. 8, 230, 238; மெய்யீற்றின் முன் உயிர்வர உடம்படு மெய்யல்லாத வகரமெய் பெற்றதென்பதற்கு (தொல். புணரியல், சூ. 38-ந) மேற்கோள்

2. யாப்பர்—கட்டுப்படுவர்.

மு. பெருங். 3. 12 : 33 - 4; 'ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை, யிருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே' நறுந்தொகை.

155. புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி
கல்லா வொருவ னுரைப்பவுங் கண்ணோடி
நல்லார் வருந்தியுங் கேட்பரே மற்றவன்
பல்லாரு ணாணல் பரிந்து.

1. கோட்டி - சபையைச் சேர்ந்த; "கோட்டியென்பது ஈண்டு ஆகுபெயர்; 'புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி' என்புழிப்போல" (குறள். 401 - பரிமேல்), "வெள்ளைக்கோட்டி" (சிலப். 30: 198), "வம்பக்கோட்டி" மணி. 14: 63.

மு. நாலடி. 316.

156. கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
யிடித்துநீர் கொள்ளினு மின்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து.

1. கடித்துக் கரும்பு-வரைவினையுடைய கரும்பு; ஆவது, வரைந்துகொண்ட கரும்பு என்றபடி. வல்லெழுத்துப்புணர்ச்சிக்கும் (தொல். செய். சூ.12 - ந), கடியென்னும் உரிச்சொல் வரைவுப்பொருட்கண்வந்ததற்கும் (நன் - மயிலை. சூ. 456; நன் - வி. சூ. 457) மேற்கோள்.

4. சிதைந்து - நிலைதிரிந்து; மனந்திரிந்து என்றுமாம்.

157. கள்ளார்கள் ளுண்ணார் கடிவ கடிந்தொரீஇ
யெள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவ திலர்.

1. கள்ளார் - வஞ்சித்துக் கொள்ளக் கருதார்; குறள். 282; சீவக......
3. காட்சியார் - அறிவுடையார்; குறள். 199.
4. சாயின் - தளர்ந்தால். பரிவதிலர் : நாலடி. 182.

158. பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருடனாய்த் தீய
புறங்கூற்றின் § மூகையாய் நிற்பானேல் யாது
மறங்கூற வேண்டா வவற்கு.

ழ. நாலடி. 230; "பல்லார், மறையிற் செவியிலன் தீச்சொற்கண் மூங்கை", "மயல வயலவர் நூல்", "இறையிற் பெரியார்க் கிறை" ஏலாதி. 15; 20.

(பி - ம்) § 'மூங்கை'

159. பன்னாளுஞ் சென்றக்காற் பண்பிலார் தம்முழை
யென்னானும் வேண்டுப வென்றிகழ்ப—வென்னானும்
வேண்டினு நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டொறுஞ் செய்வர் சிறப்பு.

3 - 4. விழுமமென்பது சீர்மையாகிய குறிப்புணர்த்தியதற்கு (தொல். உரி. சூ. 56 - சே; ஷை ஷை சூ. 55 - ந; இ - வி. சூ. 282) மேற்கோள்.

ழ. நாலடி. 348 : 4; 349 ; "ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம், பலநாள் பயின்று பலரொடு சொல்லினுந், தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ" புறநா. 101.

160. உடையா ரிவரென் றொருதலையாப் பற்றிக்
கடையாயார் பின்சென்று வாழ்வ—ருடைய
‡பெலந்தலைப் பட்டது போலாதே நல்ல
குலந்தலைப் பட்ட விடத்து.

1. உடையார்—செல்வமுடையார்.

(பி - ம்) ‡ 'பிலம்'

## நான்காம் அதிகாரம், † மேன்மக்களியல்பு.

161. பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்—வெறுத்தபி
ஞர்க்கு மருவி யணிமலை நன்னாட
பேர்க்குதல் யார்க்கு மரிது.

1 - 2. "பொறுப்ப ரென்று அரசர் வெறுப்பன செய்யற்க என்பது கூறப்பட்டது" (குறள். 700 - பரிமேலழகர்), "பொறுப்ப ரெனக்கருதி, யாவர்க்கே யாயினு மின்னா செயல்வேண்டா" (பழ. 335), "சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம், பெரியோ ராயிற் பொறுப்பது கடனே", "சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின், பெரியோ ரப்பிழை பொறுத்தலு மரிதே" நறுந்தொகை.

ஒ. "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேனுங் காத்த லரிது" குறள். 29.

(பி - ம்) † 'பெரியாரைப்பிழையாமை'

162. பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்து—மன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமி† லறிவி னவர்.

(பி - ம்) † 'அறிவிலவர்'

163. அவமதிப்பு மான்ற மதிப்பு மிரண்டு
மிகைமக்க ளான்மதிக்கற் பால—நயமுணராக்
கையறியா மாக்க ளிழிப்பு ‡ மெடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார்.

3. கையறியா மாக்கள் : நாலடி. 59; நன் - வி. சூ. 137.

ஒ. நாலடி. 294; "நாயின்மேலேறி வையாளி விட்டாலென்ன வீழ்ந்தா லென்ன" பழ...

(பி - ம்) ‡ 'எடுத்துரைக்கும்'

164. விரிநிற நாகம் விடருள தேனு
முருமின் கடுஞ்சினஞ் சேணின்று—முட்கு
மருமை யுடைய வரண்சேர்ந்து முய்யார்
பெருமை யுடையார் செறின்.

1. குறள், 25,29.

மூ. " இறந்தமைந்த சார்புடையா ராயினு முய்யார், சிறந்தமைந்த சீரார் செறின் " குறள். 900.

165. எம்மை யறிந்திலி ரெம்போல்வா ரில்லென்று
தம்மைத்தாங் கொள்வது கோளன்று—தம்மை
யரியரா நோக்கி யறனறியுஞ் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள்.

4. கோள் - மதிப்பு ; குணமெனினுமாம்.

மூ. நாலடி. 340; " வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை " (குறள். 439), " தன்னை வியப்பிப்பான் தற்புகழ்த றீச்சுடர், நன்னீர் சொரிந்து வளர்த்தற்று " நீதிநெறி. 19.

166. நளிகடற் றண்சேர்ப்ப நாணிழற் போல
விளியுஞ் சிறியவர் கேண்மை—விளிவின்றி
யல்கு நிழற்போ லகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு.

மூ. பெருங். 3. 19: 189 ; நாலடி. 125.

167. மன்னர் திருவு மகளி ரெழினலமுந்
துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா—துன்னிக்
குழைகொண்டு தாழ்ந்த குளிர்மர மெல்லா
முழைதங்கட் சென்றார்க் கொருங்கு.

1. திரு - செல்வம் ; நாலடி. 291, 304.

2. தகல் - யோக்கியதை.

மூ. கருத்து : குறள். 216.

168. தெரியத் தெரியுந் தெரிவிலார் கண்ணும்
பிரியப் பெரும்படர்நோய் செய்யும்—பெரிய
வுலவா விருங்கழிச் சேர்ப்பயார் மாட்டுங்
கலவாமை கோடி யுறும்.

2. படர்-பிரிவாற்றாமையாலுண்டாகுந் துன்பத்தை எப்பொழுதும் நினைத்தல்.

1-2. நாலடி. 220, 247 ; " பேயொ டானும் பிரிவு " பழமொழி, 122.

169. கல்லாது போகிய நாளும் பெரியவர்கட்
செல்லாது வைகிய வைகலு—மொல்வ
கொடாஅ தொழிந்த பகலு முரைப்பிற்
படாஅவாம் பண்புடையார் கண்.

ரு. "கல்லாக் கழிப்பர் தலையாயார்" நாலடி. 366.

4. பண்பு: குறள். 991.

170. பெரியார் பெருமை சிறுதகைமை யொன்றிற்
குரியா ருரிமை யடக்கந்—தெரியுங்காற்
செல்வ முடையாருஞ் செல்வரே தற்சேர்ந்தா
ரல்லல் களைப வெனின்.

3 - 4. கருத்து: "செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்" (நறுந்தொகை), "நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர, செய்யா தமைகலா வாறு", "தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு, வேளாண்மை செய்தற் பொருட்டு" (குறள். 219, 212), "கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு, செல்வமும் செல்வ மெனப்படு - மில்லார், குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமுந், தலைவணங்கித் தாழப் பெறின்" நீதிநெறி. 16.

## ஐந்தாம் அதிகாரம், நல்லினஞ்சேர்தல்.

171. அறியாப் பருவத் தடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வு—நெறியறிந்த
நற்சார்வு சாரக் கெடுமே வெயின்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு.

1 - 2. "சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான், சுற்றமாச் சூழ்ந்து விடும்", "நல்லினத்தி னூங்கு துணையில்லை தீயினத்தி, னல்லற் படுப்பதூஉ மில்" குறள். 451, 460.

172. அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மையெஞ் ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்.

ரு. பலநோக்காகி ஓடியநோக்கிற்கும் (தொல். செய். சூ. 104) செவியுறைக்கும் (ஷை. ஷை. சூ. 114) மேற்கோள் காட்டுவர் இளம்பூரணர்;

'அறமினறநெறி......பெரியார்வாய்ச் சொல்: என்னும் இதனுள் ஒருவழி நின்ற எஞ்ஞான்றுமென்றதனைப் பிரித்துப் பிறவழியும் கூட்டி முடிக்க வேண்டுதலிற் பிரிநிலையெச்சமாயிற்று; இதனை விளக்குமென்ப" நன் - மயிலை. சூ. 359.

173. அடைந்தார்ப் பிரிவு மரும்பிணியுங் கேடு
முடங்குடம்பு கொண்டார்க் குறலாற்—றொடங்கிப்
பிறப்பின்னா தென்றுணரும் பேரறிவி னாரை
யுறப்புணர்க வம்மாவென் னெஞ்சு.

பிறவித்துன்பம்

2. உடங்கு - ஒருமிக்க; ஒருங்கே.

3-4. கருத்துமாறு: நாலடி. 174.

174. இறப்ப நினையுங்கா லின்னா தெனினும்
பிறப்பினை யாரு முனியார்—பிறப்பினுட்
பண்பாற்று நெஞ்சத் தவர்களோ டெஞ்ஞான்று
நண்பாற்றி நட்கப் பெறின்.

1-2. நாலடி. 173.

4. நட்க - நேசிக்க.

175. ஊரங் கணநீ ருரவுநீர்ச் சேர்ந்தக்கால்
†பேரும் பிறிதாகித் தீர்த்தமா—மோருங்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து.

1. அங்கணம்: குறள். 720.

மூ. நாலடி. 176, 177; "கோதிலா வமுதனாளி குரைகழல் குறுகிற் கீழாஞ், சாதியிற் கடைப்பட் டோர்க ளாகிலுந் தலைவ ராவர், வீதியி லொழுகு நீரு மசழிடை விரவுநீரும் பாய்தலால், நதியிலங்கீர் தீர்த்தமாம் பரிசுபோல" (தோன்றி), "பெரிய குடிப்பிறந் தாருந் தமக்குச், சிறியா ரினமா யொழுகுத, லெறியிலை, வேலொடு நேரொக்குங் கண்ணா யஃதன்றோ, பூவொடு நாரியைக்கு மாறு" பழ. 356; சூளா. இரத. 104; நன்னெறி. 9.

(பி - ம்) † 'பேரும் பெரிதாகி'

176. ஒண்கதிர்‡ வாண்மதியஞ் சேர்தலா லோங்கிய
வங்கண் விசும்பின் முயலுந் தொழப்படூஉங்

குன்றிய சீர்மைய ராயினுஞ் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின்.

1-2. "திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயால்" (கலி. 144), "பிறை யது வளரத் தானும் வளர்ந்துடன் பெருகிப் பின்னாள், குறைபடு மதியந்தேயக் குறுமுய றேய்வதேபோல்", "முயலிலாமதி" நைடதம், அரசாட்சி. 6.

மு. பழ. 88; "செஞ்சடை யொருவன் கண்டஞ் சேர்தரப் படுதலாலே, நஞ் சுமிவ் வுலக மெல்லாந் தொழப்படு நலத்த தன்றே" (தோன்றி), "மிக்காரைச் சேர்தன் மிகமாண முன்னினிதே" (இனியவைநாற்பது), இது, தனிச் சொலின்றி ஒரு விகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பா; வீர. யாப்பு. சூ. 8.

(பி-ம்) ‡ 'வான்மதியம்'

177. பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய்§ நிறந்தெரிந்து தோன்றாதாந்—தேரிற்
சிறியார் சிறுமையுந் தோன்றாதா நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து.

மு. "காதன் மதியங் களங்கமுடைத் தானாலும், பூதலத்தை யெல்லாம் பொலி விக்கு - மோதுசில, குற்ற முடையா ரெனினுங் குவலயத்து, நற்றகையார் நல்ல ரென்றே நாடு" (வீர. அலங்கார. சூ. 20-மேற்), "தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம், மருண்ட தன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே" இராமாவ தாரம், பாலகாண்டம்......

(பி-ம்) § 'நிறந்திரிந்துதோன்றாதாற் றேரில்'

178. கொல்லை யிரும்புனத்துக்† குற்றி யடைந்தபு
லொல்காவே யாகு முழவ ருழுபடைக்கு
மெல்லியரே யாயினு நற்சார்வு சார்ந்தார்மேற்
செல்லாவாஞ் செற்றார் சினம்.

மு. "தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச், செற்றார் செயக்கிடந்த தில்" (குறள். 446), "மெலியோர் வலிய விரவலரை யஞ்சார், வலியோர் தமைத் தா மருவிற்—பாலியேல், கட்வு ளவிர்சடைமேற் கட்செவி யஞ்சாதே, படர் சிறைய புள்ளரசைப் பார்த்து" (நன்னெறி. 9), "தலையிழந்தா னெவ்வுயிருந் தந்தான் பிதாவைக், கொலைபுரிந்தான் குற்றங்க டந்தா - னுலகிற், றனிமுதன்மை பூண்டு யர்ந்தோர் வேண்டுவரேற் றப்பாம், வினையும் விபரீத மாம்" வீர. அலங்கார. சூ. 20.

(பி - ம்) † 'குத்தி'

179. நிலநலத்தா னந்திய நெல்லேபோற் றத்தங்
குலநலத்தா லாகுவர் சான்றோர்—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினஞ் சேரக் கெடும்.

மு. "நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க், கினத்தியல்ப தாகு மறிவு" குறள். 452.

180. மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த
வினத்தா லிகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
யெறிபுனந் தீப்பட்டக் கால்.

1. நாலடி. 245.

3. "நட்பொழுந்தாலு நீங்காக்கால், 'வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறுபோலத் தீங்கு வருதலின்" (குறள். 797) என உரைநடையாக அமைத்தனர் பரிமேலழகர்.

3 - 4. புறம். 108 : 1 - 3 ; 168: 11.

மு. "[1]மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா, மின்னா னெனப்படுஞ் சொல்", "மனநல மன்னுயிர்க் காக்க மினநல, மெல்லாப் புகழுந் தரும்" (குறள். 453, 457), "சந்தனத்தைச் சார்தருவுந் தக்க மணங்கமழுஞ், 'சந்தனத் தைச் சார்வேய் தழல்பற்ற—வந்தவனந், தானுமச்சந் தனமுந் தன்னினமு மாள்வ தன்றித், தானுங் கெடச்சுடுமே தான்" நீதிவெண்பா......

## ஆறும் அதிகாரம், பெருமை.

181. ஈதலிசையா திளமைசே ணீங்குதலாற்
காத லவருங் கருத்தல்லர்—காதலித்
தாதுநா மென்னு மவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள்.

182. இற்சார்வி னேமாந்தே மீங்கமைந்தே மென்றெண்ணிப்
பொச்சாந் தொழுகுவர் பேதையார்—ரச்சார்வு
நின்றன போன்று நிலையா வெனவுணர்ந்தா
ரென்றும் பரிவ திலர்.

1. "இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை, யெல்லாருஞ் செய்வர் சிறப்பு" (குறள். 752). ஏமாந்தேம் - ஆசைப்பட்டேம்; புறம். 101; 198; பொருந. 98.

2. பொச்சம் - குற்றம்; மறவியென்பாருமுளர்; குறள். 532 - பரிமேல்.

183. மறுமைக்கு வித்து மயலின்றிச் செய்து
சிறுமைப் படாதேநீர் வாழ்மி—னறிஞராய்
நின்றுழி நின்றே நிறம்வேறுங் கார ண
மின்றிப் பலவு முள.

1. "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்புக்கோர் வித்து" குறள். 24.

184. உறைப்பருங் காலத்து மூற்றுநீர்க் கேணி
யிறைத்துணினு மூராற்று மென்பர்—கொடைக்கடனுஞ்
‡ சாஅஅயக் கண்ணும் பெரியார்போன் மற்றையா
§ ராஅஅயக் கண்ணு மரிது

1. உறைப்பு : குறள். 559.

3. நாலடி. 149, 185, 358 ; குறள். 975.

மு. நாலடி. 147, 150-ஆம் செய்யுட்களையும் அவற்றின் குறிப்பையும் பார்க்க.

(பி - ம்) ‡ 'சாஅய்க்கண்' §, 'ஆஅய்க்கண்'

185. உறுபுன றந்துல கூட்டி—யறுமிடத்துங்
§ கல்லூற் றுழியூறு மாறேபோற்—செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணுஞ்—சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை.

1. உறு என்னும் உரிச்சொல் மிகுதிப்பொருளில் வந்ததற்கு 'உறுபுன றந்துல கூட்டி' என்பது (இ - வி. சூ. 281) மேற்கோள்.

மு. நாலடி. 147 : 4 ; 150 ; 153 : 4 ; "இடனில் பருவத்து மொப்புர விற் கொல்கார் கடனறி காட்சியவர்" (குறள் 218), "ஆற்றுப் பெருக்கற் றடி சுடினு மவ்வா, றூற்றுப் பெருக்காலுலகூட்டு—மேற்றவர்க்கு, நல்லகுடிப் பிறந் தார் நல்கூர்ந்தாராலுனு, மில்லையெனமாட்ட ரிசைந்து" ( நல்வழி), "இஃது ஈற்றடி ஒழிந்த ஏனையடிகள் தனிச்சொற்பெற்று வந்தது" வீர. யாப்பு. சூ. 8.

(பி - ம்) § 'கல்லுற்றுழி'

186. பெருவரை நாட பெரியார்கட் டீமை
கருநரைமேற் சூடேபோற் றோன்றுங்—கருநரையைக்

கொன்றன்ன வின்னா செயினுஞ் சிறியார்மே
லொன்றானுந் ‡ தோன்றா கெடும்.

1. இன்னா செயினும் : நாலடி. 225, 226, 227.

2. "நரை - இடபம்; 'கருநரைமேற் சூடேபோல்'' என்றார் பிறரும்'' திருநூற்று. 34.

1 - 2. "உயர்ந்தோர்கட் குற்றம்,......மாயா, நரையான் புறத்திட்ட சூடு'' (பழ. 48), "குடிப்பிறந்தார் கண் விளங்குங் குற்றம் விசும்பின், மதிக் கண் மறுப்போலு யர்ந்து'' (குறள். 957), "விதிப்பட்ட நூலுணர்ந்து வேற்றுமை யில்லார் கதிப்பவர் நூலினைக் கையிகந்தாராகிப், பதிப்பட வாழ்வார் பழியாய செய்தல், மதிப்புறத்திட்ட மறு'' (பழ. 258), "விதிப்பட்ட நூலுணர்ந்து வேற்றுமை நீக்கிக், கதிப்பட்ட நூலினைக் கையிகந் தாக்கிப், பதிப்பட்டு வாழ்வார் பழியாய செய்தல், மதிப்புறத்திற் பட்ட மறு'' அறநெறிச்சாரம், 162.

2 - 4. கருநரையைக்.........கெடும்: "கன்றி முதிர்ந்த கழியப் பன்னாள், செயினு மொன்றுஞ் சிறியார்க ணொன்றானுந் தோன்றாவா, மொன்றா விடினு முயர்ந்தார்ப் படுங்குற்றங், குன்றின் மேலிட்ட விளக்கு'' பழ. 204.

(பி - ம்) ‡ 'தோன்றாக் கெடும்'

187. இசைந்த சிறுமை யியல்பிலா தார்கட்
பசைந்த துணையும் பரிவா—மசைந்த
நகையேயும் வேண்டாத நல்லறிவி னார்கட்
பகையேயும் பாடு பெறும்.

2. அசைந்த - தளர்ந்த.

மு. கருத்து: நாலடி. 137, 233; பெருங். 4. 4: 21 - 2; 4. 5 : 2; "பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா ரேதின்மை கோடி யுறும்'' குறள். 816.

188. மெல்லிய னல்லாருண் மென்மை யதுவிறந்
† தொல்லாருட் கூற்றுட்கு முட்குடைமை-யெல்லாஞ்
சலவருட் சாலச் சலமே நலவரு
ணன்மை வரம்பாய் விடல்.

மு. "ஒருநெறிப்படாதும் ஓரியன்முடியாதும் வருமிடம்வழுவாம்; அஃதாவது புணர்தல் வேண்டித் தோழியை யிரந்து குறையுறுவான் அவ்விடத்திற்குத் தக்க உரைகூறாது, தன்னாற்றலும் ஆற்றாமையும் பிறவுங் கூறல்; மெல்லிய னல்

லாய் மென்மை யதுவிறந்து......நன்மை வரம்பாய் விடல்' இதனுனுமறிக'' தொல். செய். சூ. 201 - இளம்.

(பி - ம்) † 'ஒன்னருள்'

189. கடுக்கி யொருவன் கடுங்குறளை பேசி
மயக்கி விடினு மனப்பிரிப்பொன் றின்றித்
துளக்க மிலாதவர் தூய மனத்தார்
விளக்கினு ளொண்சுடரே போன்று.

2. கடுக்கி - கடுமையாகி. குறளை - கோள்.

3. துளக்கம் - அசைவு.

190. முற்றுற்றுந் துற்றினை நாளு மறஞ்செய்து
பிற்றுத்துத் § துற்றுவர் சான்றவ—ரத்துத்து
முக்குற்ற நீக்கி முடியு மளவெல்லாந்
துக்கத்து ணீக்கி விடும்.

3. முக்குற்றம் - காமவெகுளி மயக்கம்; குறள். 360.

4. துக்கம் - துன்பம்.

(பி - ம்) § துற்றும்' 'துற்று,' 'துற்றுவர்'

---

## ஏழாம் அதிகாரம், தாளாண்மை.

191. கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போற்
கேளீவ துண்டு கிளைகளோ † துஞ்சுப
வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறுந்
தாளாளர்க் குண்டோ தவறு.

2. கந்து - கட்டுத்தறி.

4. தாளாளர்: நாலடி. 200.

(பி - ம்) † 'துஞ்சுக', 'துஞ்சுவ', 'துஞ்சுவா'

192. ஆடுகோ டாகி யதரிடை நின்றதூஉங்
காழ் ‡ கொண்ட கண்ணே களிறணைக்குங் கந்தாகும்
வாழ்தலு மன்ன தகைத்தே யொருவன்றான்
றாழ்வின்றித் தன்னைச் செயின்,

1 - 2. புறம். 57: 10 - 11.

மூ. கருத்து: "உற்றதற் கெல்லா முரஞ்செய்ய வேண்டுமோ, கற்றறிந் தார் தம்மை வெகுளாமைக் காப்பமையு, நெற்செய்யப் புற்றேய்ந்தாற் போல நெடும்பகை, தற்செய்யத் தானே கெடும்" (பழ. 83), "வகையறிந்து தற்செய்து தற்காப்பமாயும் பகைவர்கட் பட்ட செருக்கு" குறள். 878.

(பி - ம்) ‡ 'கொண்டக்கண்'

193. உறுபுலி யூனிரை யின்றி யொருநாட்
சிறுதேரை பற்றியுந் தின்னு—மறிவினுற்
காற்றொழி லென்று கருதற்க கையினுன்
மேற்றொழிலு மாங்கே மிகும்.

194. இசையா தெனினு மியற்றியோ ராற்று
லசையாது நிற்பதா மாண்மை—யிசையுங்காற்
கண்ட றிரையலைக்குங் கானலந் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று.

3. கண்டல் - தாழை; முள்ளிச்செடியென்றுமாம்.

மூ. கருத்து: நாலடி 199: 3 - 4; "அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும், பெருமை முயற்சி தரும்" குறள். 611.

195. நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பி
னொண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
யென்றிவற்று னாகுங் குலம்.

3. ஒன்றோ, எண்ணிடைச்சொல்; "அறனொன்றோ வான்வொழுக்கு" (குறள்) என்புழிப்போல.

மூ. "ஆக்கு மறிவா னலது பிறப்பினுன், மீக்கொ ளுயர்விழிபு வேண் டற்க" நல்வழி.

196. ஆற்றுந் துணையு மறிவினை யுள்ளடக்கி
யூக்க முரையா ருணர்வுடையா—ரூக்க
முறுப்பினு லாராயு மொண்மை யுடையார்
குறிப்பின்கீழ்ப் பட்ட துலகு.

2. "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங், கடுத்தது காட்டு முகம்", "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின், வகைமை யுணர்வார்ப் பெறின்" குறள். 706, 709.

197. சிதலை தினப்பட்ட வால மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றிற் றான்பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்.

1. சிதலை - செல்; ஆவது, கறையான். ஊன்றுதல் - தாங்குதல்.

2. மதலை - தூண் "ஊன்றுமென்றது இப்பொருட்டாதல், 'மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு,' என்பதனானுமறிக." (குறள். 615) என்பர் பரிமேலழகர்.

மு. "இவனே, முழுமுதலறுத்த கோளி யாலத்துக், கொழுநிழ னெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்குத், தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது, நல்லிசை முதுகுடி நடுக்கறத் தழீஇ.............பொருநரைப், பொருஅச் செருமாண் பஞ்சவ ரேறே" (புறநா. 58), "இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று, நல்லா ளிலாத குடி" (குறள் 1030), "தாங்கு சிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன, வோங்குகுல நையவத னுட்பிறந்த வீரர், தாங்கல்கட னாகும்" (சீவக. 498), "நைந்தடியற்ற வால நடுங்கிவீழ் கின்றதென்று, வந்தவீ ழூன்றி வீழா வகைநிலை விளக்கு மாபோல், மைந்தர்க டமக்கு ணல்ல வறிவினன் மகிழ்ந்து சேர்ந்து, தங்கையைத் தளரா வண்ணந் தாங்குவர் தவத்தி னென்றான்" உத்தரகாண்.

198. ஈனமா யில்லிருந் தின்றி விளியினும்
மானந் தலைவருவ செய்பவோ—யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றா
ளரிமா மதுகை யவர்.

1. ஈனம் : நாலடி. 40. இன்றி - ஒருபொருளில்லாமல்.

மு. கருத்து : நாலடி. 300; குறள். 969; இனியதுநாற்பது. 14, 27. "தோல்வற்றிச், சாயினுஞ் சான்றாண்மை குன்றாமை" திரிகடுகம்.

199. தீங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி
தேங்கமழ் நாற்ற மிழந்தாஅங்—கோங்கு
முயர்குடி யுட்பிறப்பி னென்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை யில்லாக் கடை.

3 - 4. நாலடி. 194.

200. பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங்
கருனைச்சோ றார்வர் கயவர்—கருனையைப்

பேரு மறியார் நனிவிரும்பு தாளாண்மை
நீரு மமிழ்தாய் விடும்.

1. பெருமுத்தரையர் : (நாலடி. 296), "பெருமுத்தரையர் பெரிதுவந் தீயும்: என்ற வழிப் பெருமுன்னர்க் குறித்துச் சீராக்கவேண்டுமாயினீண்டுமொழி சிதைத்தலின் நிரைபசையாகாதாயிற்று" தொல். செய். சூ. 8 - இளம்பூரணம்.

௰. "தெண்ணீ ரடுபுற்கை யாயினுந்தான் தந்த, நுண்ணவி னூங்கினிய தில்" குறள். 1065.

முதலாவது
அரசியல் முற்றும்

# நாலடியார்ச் செய்யுளகராதி.

---

ஸ்ரீ :

# நாலடியார்

## அரும்பதமுதலியவற்றின் அகராதி.

# அரும்பதமுதலியவற்றின் அகராதி.